# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



KALKI • 28.09.2008 • ரூ 10.00 • 96 பக்கங்கள்

ஸ்ரீ லலிதா
பாகம் 3



Vs



விஜய்
Exclusive!
'சில்வர் ஸ்பூனோடு பிறக்கவில்லை"



# சரோஜா

தனிப்பட்ட ஹீரோ என்பதெல்லாம் ஹாலிவுட்டின் மோசமான கண்டுபிடிப்பு, என்பார் உலகப் புகழ்பெற்ற சிலி நாட்டு இயக்குநரான அலேஜான்ட்ரோ ஹொடரோவ்ஸ்கி. தெரிந்தோ தெரியாமலோ, ஹொடரோவ்ஸ்கியைப் பின்பற்றிப் படம் எடுத்துக்கொண்டிருக்கிறார் வெங்கட் பிரபு. தன்னுடைய இரண்டாவது படத்திலும் மையக் கதாபாத்திரம் என்று ஒன்று இல்லாமல், எல்லாக் கதாபாத்திரங்களையும் மையத்தில் நிறுத்தியிருக்கிறார். சபாஷ்.

கிரிக்கெட் மேட்ச் பார்க்க நண்பர்கள் நான்கு பேர் சென்னையிலிருந்து ஹைதராபாத்துக்குச் செல்கிறார்கள். போகும் வழியில் தடங்கல். குறுக்கு வழிப்பாதையில் செல்ல முற்படும்போது, ஒரு பணக்காரப் பெண்ணைக் கடத்தியுள்ள கும்பலிடம் வகையாக மாட்டிக் கொள்கிறார்கள். முடிவு எதிர்பார்த்தது போலவே சுபம்.

ஒரு த்ரில்லர் படத்தைச் சிரித்துக்கொண்டே பார்க்க வைத்திருக்கிறார் இயக்குநர். இதற்காக சிவாவையும் ப்ரேம்ஜியையும் வெங்கட் பிரபு பயன்படுத்திய விதம் பாராட்டக்கூடியது. குடும்பஸ்தரான எஸ்.பி.பி.சரண், கல்யாணம் ஆகாத நண்பர்களிடம் படும்பாடு மற்றொரு சுவாரஸ்யம். படம் முழுக்க பாதி வெளிச்சத்தில் மட்டுமே பார்க்க முடிந்தாலும், வேகா இனிய வரவு. இசையோடு கூடுதலாக ஆடிப்பார்க்கவும் ஆசைப்படும் யுவன் ஷங்கர் ராஜா, அதற்குரிய திறமைகளை வளர்த்துக்கொண்டால் மட்டுமே அதையும் ரசிக்க முடியும். இரண்டாவது பாதி முழுக்க படம் இருட்டில்தான் நகர்கிறது. சக்தி சரவணனின் ஒளிப்பதிவு படத்துக்குப் பெரிய பலம்.

வெங்கட் பிரபுவிடமிருந்து இன்னொரு சுவாரஸ்யப் படம் என்றாலும், 'சென்னை 28' போல மண்ணின் கதையை நாடாமல் எதனால் ஆங்கிலப் பட டிவிடியின் உதவியை நாடினார் என்று புரியவில்லை. அதே போல இரண்டாவது பாதியில் குறைகள் சொல்வதற்கு நிறைய இடமளித்ததும் ஏனோ? நாடகப் பாணியில் ஒரு கிளைமாக்ஸ் வேறு. தமிழில் நவசினிமாவின் உதயத்தை வெங்கட் பிரபுவிடம் ரசிகர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதற்கு ஈடுகொடுக்கும் வகையில் அவர் தன் படைப்பை மேலும் அழகாக செதுக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

– சநகன்

மின்னல் கதைகள் மின்னலைப் போல் மனத்தில் பளீரென்று இடம் பிடித்தன.

- எஸ். மீனா, ஸ்ரீரங்கம்.

மெத்'தனம்' காட்டாமல் விரைவுத் 'தனம்' காட்டி எழுதப்பட்டிருந்த 'தனம்' திரைப்பட விமர்சனத்தில், ப்ளஸ் என தாராளத்'தனத்'தையும், மைனஸ் என கஞ்சத்'தனத்'தையும் காட்டியது நிஜத் தனமே!

- சு.இந்துமதி, நெய்வேலி

'அன்பு வேறு; அஹிம்சை வேறு' அருமையான வியாக்கியானம்.

- லட்சுமி ஆனந்தகிருஷ்ணன், சென்னை - 101

...தது. அந்த வயலின் மேதைக்குச் சிறந்த அஞ்சலியாக அமைந்தது.

- டி.கே.சுப்பிரமணியன், பெங்களூரு

அமரர் கல்கியின் பிறந்தநாள் மற்றும் இளம் இசைக் கலைஞர்களுக்கு விருது வழங்கும் விழாவை நேரில் கண்டு ரசித்த உணர்வு ஏற்படுகிறது.

- இரா. சக்கரபாணி, கோ.புதூர்

இலக்கியம், அரசியல், விஞ்ஞானம், நகைச்சுவை, ஆன்மிகம், திரைப்படத்துறை என, கல்கி ஒரு டிபார்ட்மென்ட்டல் ஸ்டோராக விளங்குகிறது.

- எஸ். அமிர்தா சௌந்தர், சென்னை - 26

# கல்கி டிபார்ட்மென்டல்

ரஜினி, ரசிகர்களை ஒரு வழி பண்ணுகிறார் என்றால், ஜாலி ஸ்டோர்ஸ் அவரைப் பல வழி பண்ணி விடும் போலிருக் கிறதே!

- எஸ்.ஜானகி, உடுமலை

கலையாத தன் நினைவுகளால், இயக் குநர் சிம்புதேவன், வாசிப் பவர்களையும் சேர்த்தே இயக்குகிறார், இயல்பான தமிழ் நடையில்!

- ப.கா.மணிமொழியன், மதுரை - 16

குன்னக்குடியின் பழைய பேட்டியை மறுபிரசுரம் செய்



'**செ**ல்வகணபதி அமைச்சராக இருக்கும் போது அவர் போட்ட கையெழுத்தை நம்பி, கோப்புகளில் ஒப்புதல் கொடுத்தவர் அம்மா...!' என்று பொள்ளாச்சி ஜெயராமன் கூறியது ஜெ.வின் நிர்வாகத் திறமையை காட்டுகிறது.

**- ஜெயபிரகாஷ், சர்கார்பதி**

'**இ**டம் பெயர்தல்' கவிதை இதயத்தை விட்டு இடம்பெயர மறுக்கிறது.

**- எஸ்.வெங்கடரமணன், சென்னை - 33.**

**பு**ன்னகைப் புகைப்படங்கள் - கமென்ட்ஸ் ரசனையான நச்...நச்!

**- த. சத்தியநாராயணன், அயன்புரம்**

**அ**டுத்தவர் மீது சேற்றை வாரி வீசும் உள்ளூர் அரசியல்வாதிகளின் புளித்துப்போன நேர்

ஸ்டோர்ஸ்

காணலிருந்து வித்தியாசமாக இருந்தது, யஷ்வந்த் சின்ஹா பேட்டி.

**- ஆர்.நாகராஜன், சென்னை - 117**

'**ஒ**ரு எழுத்தாளருக்கு அழகு, வாழ்விலும், எழுத்திலும் - நேர்மை' என்ற 'தராசு'வின் பதில் நிதர்சன உண்மை!

**- ந.கதிர்வேல், வேலூர்**

**கா**ஃபி, டீ குடிப்பதால் அதிகாலை சமாசாரங்கள் சுலபமாகி விடுவதில்லை. அதிலுள்ள சுடுநீர்தான் அதற்குக் காரணம் என்ற மருத்துவக் கட்டுரை சூப்பர்!

**- எஸ். முரளி, ஸ்ரீரங்கம்**

**நி**தித்துறை மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கள் குறித்த கார்ட்டூன் அர்த்தம் பொதிந்தது.

**- வி.ஜி. சத்தியநாராயணன், சென்னை - 61**

# வட்டமேஜை




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**

உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**

வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி:
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல்: **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்:
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# விஜய் Exclusive!

‘வில்லு’ படத்தின் படப்பிடிப்பு கடந்த நான்கு மாதங்களாகத் தொடர்ந்து நடந்துவருகிறது. அதன் ஒரு பகுதியாக, வெளிநாட்டுக்குச் செல்வதற்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார் விஜய். அந்தப் பரபரப்புக்கு இடையிலும் நேரம் ஒதுக்கி, ‘கல்கி’க்காக மனம்திறந்தார் விஜய்.

‘‘என் அம்மா எழுதின ‘என் செல்ல தளபதி’ தொடரை வெளியிட்டதுக்காக, கல்கி நிறுவனத்துக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தத் தொடர் மட்டுமில்லை. பல வருஷமா ‘கல்கி’ என்னோட பேட்டிகளையும், நான் நடித்த படங்களைப் பற்றிய செய்திகளையும் வெளியிட்டு என்னை ஊக்கப்படுத்திக்கிட்டே வந்திருக்காங்க.

நான் எந்த ஊர் படப்பிடிப்புல இருந்தாலும் வாரம் தவறாம ‘என் செல்ல தளபதி’யைப் படிச்

# "சில்வர் ஸ்பூனோடு பிறக்கவில்லை"

சிடுவேன். இந்தத் தொடர்ல என்னைப் பத்தின பல விஷயங்களை மனம்திறந்து, விலாவாரியா சொல்லியிருந்தாங்க என் அம்மா.

நான் படிச்ச ஸ்கூல், என்னோட ஆசிரியர், என் நண்பர்கள்னு ஒவ்வொண் ணையும் ரொம்ப ஞாபகம் வச்சுக்கிட்டுச் சொல்லியிருந்தாங்க அம்மா. நான் திரும்ப ஒருமுறை அந்த இடத்துக்கெல்லாம் போய்ட்டு வந்தேன். அப்படித்தான் சொல் லணும். 'அடிமைப் பெண்' படத்துல அமரர் எம்.ஜி.ஆர் அவர்கள், ஒரு பாட்டைப் பாடியிருப்பாங்க. 'தாயில்லா மல் நானில்லை. தானே எவரும் பிறந்த தில்லை'. எனக்கு ஏன் இந்தப் பாட்டுப் பிடிக்கும்னு உங்களுக்குப் புரிஞ்சிருக் குமே! ஆமா, தாயில்லாமல் நானில்லை.

சில சமயம் எனக்கு இப்படித் தோணும். எனக்கு என் அம்மாவை ரொம் பப் பிடிச்சதுனாலதான் - அவங்களை இன் னைக்கும் மரியாதையா வணங்கறதுனால தான், எனக்கு இந்த உயரம் சாத்திய மாயிருக்குன்னு. அது உண்மைதானே!

'பார்ன் வித் சில்வர் ஸ்பூன்' அப்படிங் கற மாதிரி நான் பிறக்கலை. என்னோட குடும்பம் ரொம்ப சுமாரான, நடுத்தரக் குடும்பம். நான் பிறந்தப்போ, அப்பா இயக்குநர் இல்லை. உதவி இயக்குநராத் தான் இருந்தார். வேற வேற இயக்குநர்கள் கிட்ட வேலை பார்த்துக்கிட்டு இருந்தார். அம்மா மேடைக் கச்சேரிகள்ல பாடிக்கிட்டு இருந்தாங்க. அவ்வளவு கஷ்டத்துலயும் என்னை நல்லபடியா - எந்தக் குறையும் வைக்காம வளர்த்தாங்க.

அப்புறம் அப்பா இயக்குநரானார். செல்வமும் செல்வாக்கும் எங்க குடும்பத் தைத் தேடி ஓடிவந்தது. நானும் என் தங்கையும் அந்தக் குடும்பத்தின் செல்லக் குழந்தைகளானோம். இதெல்லாம் அம்மா எழுதின, 'என் செல்ல தளபதி' படிக் கறப்போ மனசுல ஓடும். அதுலயும் குறிப்பா என் தங்கையைப் பறிகொடுத்த நிகழ்ச்சியைப் படிச்சப்போ நான் அப் படியே பழைய நினைவுல துவண்டு போயிட்டேன்.

என் தங்கையை நான் இழந்தது ஈடு செய்ய முடியாத பேரிழப்பு. ஆனா, இப்போ எனக்கு ஒரு சின்ன ஆறுதல் கிடைச்சுருக்கு. அன்னைக்கி எனக்கு ஒரே ஒரு தங்கை. இன்னைக்கு எத்தனையோ லட்சம் ரசிகைகள் எனக்குத் தங்கையா கிடைச்சிருக்காங்க. அவங்க 'அண்ணா!'ன்னு கூப்பிட்டு எனக்குக் கடிதம் எழுதறதைப் படிக்கறப்போல்லாம் இறந்துபோன என் தங்கச்சியே எழுதின மாதிரி இருக்கும். 'எனக்கிருந்த ஒரே ஒரு தங்கச்சியை எடுத்துக்கிட்டு, லட்சக்கணக் கான சகோதர, சகோதரிகளைக் குடுத் திருக்கே ஆண்டவா!'ன்னு கடவுளுக்கு நன்றி சொல்றேன்.

காலம் என்னமா ஓடுது? நான் நடிச்ச முதல் படமான 'நாளைய தீர்ப்பு'லருந்து

இன்னைக்கி நடிச்சுக்கிட்டு இருக்கற 'வில்லு' வரைக்குமான காலகட்டம் எவ்வளவு முக்கிய மான ஒன்னு! நான் நடிக் கணும்னு ஆசைப்பட்டப்போ, என் அம்மா மட்டும் எனக்கு ஆதரவா குரல் குடுக்கலைன்னா, என்னோட வாழ்க்கையே திசை திரும்பியிருக்கும்.

அப்பாவும், அம்மாவும் நான் டாக்டராகணும்னு ஆசைப்பட்டாங்க. ஆனா நான் ஆக்டராகிட்டேன். நடிகனான பிறகு கூட எப்படியோ 'டாக்டர்' பட்டத்தை வாங்கி அவங்க கையில குடுத்து, அவங்க ஆசையை நிறைவேத் திட்டேன்.

என் அம்மா சொல்ற மாதிரி நான் எப்பவுமே என்னைப் பெத்தவங்களுக்கு அடங்கின பிள்ளை தான். நான் நினைச்சா எந்த முடிவையும் நானே எடுக்கலாம். ஆனா நான் எப்பவுமே அப்படிச் செய்ய மாட்டேன். இன்னைக்கும் எவ்வளவு சின்ன விஷயமா இருந்தாலும், நான் என் அப்பாவைக் கலந்துக்காம எந்தக் காரியத்தையும் செய்யற தில்லை.



எங்க அம்மாவுக்கு நான் எப்படி செல்ல தளபதியோ, அதே மாதிரிதான் எனக்கும் அவங்க 'என் செல்ல அம்மா'. இந்தத் தொடர்ல அவங்க என்னைப் பத்திப் பேசினப்போல் லாம், அவங்களே என்கூட பேசினது மாதிரி இருந்துச்சு.

அம்மா சொல்லியிருக்கற எல்லாத் தைப் பத்தியும் என் கருத்தைச் சொல்லி, அசைபோடணும்னு எனக்கு ஆசையாத் தான் இருக்கு. ஆனா, அது இன்னொரு தொடராயிடும். அவங்க எவ்வளவோ சொல்லியிருக்காங்க. என்னை ரோல் மாடலா வச்சுக்கணும்னுகூட சொல்லி யிருக்காங்க. இந்தத் தொடரை என்னோட ரசிகர்கள் எத்தனையோ பேரு தொடர்ந்து படிச் சிருப்பாங்க. அவங்களுக்காக சில வார்த்தைகள்...

''அம்மா அப்பாவை மதிச்சு நடங்க. கடமை யைச் சரியா செய்ங்க. எந்தத் தொழிலை செய்தா லும் அந்தத் தொழில்தான் உங்க சாமி, மறந்துடா தீங்க. எந்தத் துறையில இருந்தாலும் அதுல நம்பர் ஒண்ணா வரணும்னு முயற்சி செஞ்சுக்கிட்டே இருங்க. தோல்வி வர்றப்போ கலங்கிடாதீங்க. அதே மாதிரி வெற்றி வருதா, அப்போ கண்டிப்பா 'நாமதான் பெரிய ஆளு'ன்னு கர்வப்படாதீங்க. வாழ்க்கை ஜெயம்தான்!''

- பாலுசத்யா



**உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு**
**தலைமுறை தலைமுறையாக**

50 ஆண்டுகளுக்கும் மேலாக மேனிப் பராமரிப்பில் சிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது சிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும் எனவே சிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

## நீங்கள் கேட்டவை -

● வி.பெரியசாமி, தேனூர் ❐

? பொதுநன்மைக்காக விவசாய நிலங்களைக் கையகப்படுத்த, அரசுக்கு உரிமை உண்டு என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்துள்ளதே?

! சட்டம் என்பது வேறு; அதனை மக்கள் நலனுக்கு, தர்ம நியாயமாகப் பயன்படுத்துவது என்பது வேறு. தனியார் நிலங்களை ஒரு சாலை அமைக்க, ஓரளவு கையகப்படுத்தலாம். ஏர்போர்ட், கார் தொழிற்சாலை என்று தனியார்த்துறை பண முதலைகளின் நலனுக்காக, ஏராளமாகக் கையகப்படுத்தினால் அது கொடுங்கோன்மை. நீதிபதிகள் சட்டத்தைப் பார்ப்பார்கள்; ஆட்சியில் உள்ளோர் தர்ம நியாயத்தையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

● அ.பேச்சியப்பன், ராஜபாளையம்★

? அடுத்த மத்திய அரசைக் கொண்டு அணுசக்தி ஒப்பந்தத்தை ரத்துசெய்ய வைப்போம் என்று பிரகாஷ் காரத் சொல்கிறாரே, முடியுமா?

! ஏன் முடியாது? சுதேச சமஸ்தானங்களை காங்கிரஸ் ஆட்சி இந்தியாவுடன் இணைத்துக்கொண்டு, மன்னர்களுக்கு மானியம் வழங்கியது. அடுத்து வந்த காங்கிரஸ் ஆட்சி அந்த மானியத்தை ரத்துசெய்தது. முந்தைய ஆட்சி கொண்டுவந்த மதுவிலக்கை, பின்னால் வந்த தி.மு.க. ரத்துசெய்தது. முடியும் என்பதாலேயே அப்படிச் செய்யப்படும் காரியங்கள் அனைத்தும் சரியாகி விட மாட்டா!

● எஸ். வெங்கடரமணன், சென்னை - 33

? ஜெயா பச்சன் - அமிதாப் பச்சன் மன்னிப்புக் கேட்டதற்கும் ரஜினி மன்னிப்புக் கேட்டதற்கும் என்ன வித்தியாசம்?

! இரண்டிலுமே இருந்த ஒற்றுமை, மன்னிப்புக் கேட்க வைத்தவர்களின் மொழி வெறி; மன்னிப்பு கேட்டவர்களின் பிஸினஸ் புத்தி. வித்தியாசம் - அது மராட்டி. இது கன்னடம் - அவ்வளவுதான்!

● த. புகழேந்தி, கூகூர்

? கம்யூனிஸ்டுகளை, தமது கூட்டணிக்கு இழுக்கத்தான் 'பிரதமர் பதவி விலக வேண்டும்' என்று ஜெயலலிதா வற்புறுத்துவதாக தமிழக முதல்வர் கூறியிருப்பது பற்றி?

! இது கம்யூனிஸ்டுகளுக்கு முதல்வர் விடுக்கும் மறைமுக கோரிக்கை. 'மத்தியிலே கழன்றுகொண்டாலும் மாநிலத்தில் என்னைக் கைவிடாதீர்கள்' என்று கேட்டுக் கொள்கிறார். ஜெ. உள்நோக்கத்துடன் பேசுவதாகச் சொல்வது, அவரை நம்பாதீர்கள் என்று உணர்த்துவதற்காகத்தான்!

● வி.என். ரமாதேவி, சென்னை - 83

? அனைமுற்ற அரசு ஊழியர்கள், இனி அரை மணி முன்னதாக அலுவலகத்தை விட்டுக் கிளம்பலாம் எனும் சலுகை எந்த அளவுக்கு உதவியாக இருக்கும்?

! கூட்டமில்லாத பொது போக்குவரத்தில் இடம் கிட்டி, வீடு திரும்ப உதவும். அதே மாதிரி, காலை அரை மணி நேரம் முன்னதாகப் பணிக்கு வரும்படியும் சொல்லலாமே. இல்லாவிட்டால், இச் சலுகை என்பது, பிறருக்குச் செய்யப்படும் அநீதி ஆகிவிடும்!

● உ.குணசீலபாண்டியன், இராஜபாளையம்

? 'வருகிற லோக்சபா தேர்தலில் பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால், அஃப்ஸல் குருவின் தூக்குத் தண்டனையை நிறைவேற்றுவோம்' என்று ராஜ்நாத் சிங் சொல்கிறாரே? அந்த நிலை வரும் வாய்ப்பு உள்ளதா?

! பா.ஜ.க ஆட்சிக்கு வந்தால், நிறைவேறுவது சாத்தியம்தான். ஏனென்

றால், ஜனாதிபதி அமைச்சரவையின் கோரிக்கைக்குக் கட்டுப்பட்டவராகிறார். ஆனால், தேர்தல் வாக்குறுதியாக இதுபோன்ற நெகடிவ் சிந்தனைகளை அளிப்பதைவிட, பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த பாஸிடிவ்வாக என்ன செய்யமுடியும் என்று அறிக்கை விடுவதே அறிவுடைமை.



✱ மன்னிப்பு...



✱ ... மகாத்மியம்!

# ஐம்பது ரூபாய் பொட்டலம் விலைவாசியைக் குறைக்குமா?

✱ கொடையின் பிரச்னை!

● ஆர். ராஜதுரை, சீர்காழி

? ''இஞ்சினியர், டாக்டர், விஞ்ஞானி, வக்கீல்... என்று பெரிய வேலைகளுக்குச் செல்வது போல் மாணவர்கள் அரசியலுக்கு வர வேண்டும்'' என்று மணி சங்கர் அய்யர் கூறியிருக்கிறாரே?

! ஐயோ! தப்புங்க! அரசியல்ன்றது பட்டியலில் உள்ள மற்றவற்றைப் போல தொழில் கிடையாது. அது பெருமளவுக்குத் தொண்டுதான்; அப்படித்தான் இருக்க

✱ மறைமுக கோரிக்கை!





✱ ஜாலி ஃபார்முலா!



✱ ஆபத்தான அழைப்பு!



✱ ரத்து மிரட்டல்!



✱ நெகடிவ் வாக்குறுதி!

வேண்டும். தொழிலாகக் கருதி வரவே கூடாதுங்க.

● **என்.மாணிக்கம், மின்னல்**

**? நியாய விலைக் கடைகளில் வழங்கும் அரிசி, நாற்றம் அடிக்கிறது; மக்கிப் போயுள்ளது என்று விஜயகாந்த் சொல்கிறாரே - இவர் ஆட்சிக்கு வந்தாலும் அதே கொடவுன் அரிசியைத்தானே வழங்கப் போகிறார்?**

! நீங்க சொல்றது சரிதான். யார் ஆட்சிக்கு வந்தாலும் ரேஷன் அரிசி அப்படித்தான் இருக்கும். அதனால்தான் ரேஷன் அல்லாமல் பொதுச் சந்தையிலேயே நியாய விலைக்கு உணவுப் பொருள்கள் கிடைக்கவேண்டும் என்பது. அது உற்பத்திப் பெருக்கத்தினால் மட்டுமே நடக்கும்.

● **அகிலா அன்புமணி, ஈரோடு**

**? நியாய விலைக் கடைகளில், மளிகைப் பொருட்களை ஐம்பது ரூபாய் பாக்கெட்டாகத் தருவது என்பதை, விலைவாசியைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கை யாக எடுத்துக்கொள்ள முடியுமா?**

! இதற்கு முந்தைய கேள்வி - பதிலைப் படித்தால், இந்த நடவடிக்கை, வரப் போகும் தேர்தலைக் கருதி எடுக்கப்படுகிறதே அன்றி விலைவாசியைக் கட்டுப்படுத்த அல்ல என்பது புரியும்.

● **கே.சிபிகா தர்ஷினி, மதுரை**

**? அண்ணா பிறந்தநாளை முன்னிட்டு 1405 கைதிகளை விடுவிப்பதும், அதிலும் ஏழு வருடங்கள் மட்டுமே ஜெயிலிலிருந்தவர்களைக்கூட விடுவிப்பதும் சரியா?**

! முற்றிலும் தவறு என்று உச்ச நீதிமன்றத் தீர்ப்பே உள்ளது. நன்னடத்தை கருதி விடுவிப்பதேகூட பல சமயங்களில் ஆபத்தாக முடிகிறது. அப்படியிருக்க, சட்டத்தைச் சட்டை பண்ணாமல் இதுபோல் செய்வது விபரீதமாகவே முடியும்.

● **கீதா முருகானந்தம், திருவைகாவூர்**

**? தமிழ்நாடு, கல்வியில் முதன்மை பெறுவதாக சோனியா காந்தி புகழாரம் சூட்டுகிறாரே?**

! பின்னே, முதல்வருடன் - அதிலும் நாற்பது எம்.பி.க்கள் கொண்ட கூட்டணிக் கட்சித் தலைவருடன் ஒரே மேடையில் இருக்கிறபோது, அரிசி கடத்தல் பற்றியா பேசமுடியும்?

● **பி.பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி**

**? சுந்தர்.சி. படங்கள் எல்லாம் கணிசமான வெற்றி பெறுவது ஆச்சர்யம்தானே?**

! எதைப் பற்றியும் கவலைப்படாமல் ஜாலியாகப் படம் பார்க்கும் மக்களின் எண்ணிக்கை எப்போதும் கணிசமானதே. அதில் ஆச்சர்யம் இல்லை. ○

☐ ரூ.100/- பரிசு பெறுபவர்: **வி. பெரியசாமி, தேளூர்**

★ ரூ.50/- பரிசு பெறுபவர்: **அ.பேச்சியப்பன், ராஜபாளையம்**

# இது தான் உங்கள் கவலையா?

- சரியான வளர்ச்சியின்மை!
- படிப்பில் கவனம் செலுத்த இயலாமை
- அடிக்கடி உடல்நலமின்மை & சோர்வு!
- தேர்வில் குறைவான மதிப்பெண்கள்

## கவலை வேண்டாம் !

இப்பொழுதே கொடுக்க ஆரம்பியுங்கள்

# குரோமாஸ் JUNIOR

சமச்சீரான போஷாக்கு

## பிறகு பாருங்கள் வித்தியாசத்தை"

குரோமாஸ் JUNIOR
சமச்சீரான போஷாக்கு

- உங்கள் குழந்தையின் முழுமையான மற்றும் சீரான வளர்ச்சிக்கு (உயரம், எடை) உதவுகிறது.
- நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கிறது.
- உடலுக்குத் தேவையான விட்டமின்களைத் தருகிறது.
- உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை உறுதி செய்கிறது.

உபயோகிக்கும் முறை
ஒரு ஸ்பூன் குரோமாஸ் ஜூனியரை மிதமான அல்லது இளஞ்சூடான பாலுடனோ அல்லது தண்ணீருடனோ கலந்து கொடுக்கவும்.

டோஸ்: ஒரு டோஸ் குரோமாஸ் காலை உணவுக்குப் பிறகு
ஒரு டோஸ் குரோமாஸ் பள்ளியிலிருந்து வந்தவுடன்
ஒரு டோஸ் குரோமாஸ் இரவு படுக்கப் போகும் முன்.



அனைத்து மருந்து கடைகளிலும் கிடைக்கும்.




For any queries contact our help line
ph: 9940018025 mail id: gromass_junior@yahoo.com




● **சரோஜா சிவசங்கர், சென்னை**

***பெண்ணையும் - கம்ப்யூட்டரையும் ஒப்பிட்டு, எங்கே ஒரு கவிதை சொல்லுங்க பார்க்கலாம்?***

இசைபட இருத்தலில் கன்னியும் - கணிணியும் நேர் என்பதால் நேரிசை வெண்பா.

மென்பொருளால்
வன்பொருளை ஆளும்,
மெகாபைட் சைஸ்
தன் மெமரி கொள்ளும்,
வெகுளியாம் வைரஸால்
மின்னலாய்த் தாக்கும்
மனிதரை; இன்னவையால்
கன்னியும் கணிணியே காண்.

● **டி.ஜெய்சிங், கோயம்புத்தூர்**

***நல்லவன் என்று பெயர் வாங்க எப்படி நடக்க வேண்டும்?***

நேராக நடக்க வேண்டும்.

● **எஸ்.ஓ.வீரன், சிவகாசி மேற்கு**

***'முயற்சி திருவினையாக்கும்' என்று என்கரேஜ் செய்யும் வள்ளுவரே, 'எண்ணித் துணிக கருமம்' என்று பிரேக் போடுகிறாரே?***

வானத்தில் உள்ள நட்சத்திரங்களை எண்ணுவதும் ஒரு முயற்சிதான். ஆனால், இம்முயற்சி திருவினையாவதற்குள் பொழுது விடிந்துவிடும். ஆகவே, எண்ணும் முன் எண்ண முடியுமா என்று எண்ணித் துணிவதே கருமம்.

● **அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி**

***'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது சிலருக்குப் புரிவதில்லையே, ஏன்?***

பாவம் அந்தச் சிலர், 'முற்பகல் தூங்கி பிற்பகல் எழும்' நைட்-ஷிஃப்ட் ஆசாமிகளாக இருப்பார்கள்.

● **வசுந்தரா, பெங்களூர்**

***சீதைக்கு நடந்தது போல ராதைக்குச் சுயம்வரம் நடந்திருந்தால்?***

ஐம்பத்தாறு தேசத்து ராணிகளும் வந்திருப்பார்கள், கண்ணனைக் காண!

கம்ப்யூட்ட

● **வி.ஜி. சத்திய நாராயணன், நங்கநல்லூர்**

***சாண்டில்யனின் நாவல்களில் வரும் கற்பனை, வர்ணனைகளை ரசித்ததுண்டா?***

இளமையில் சாண்டில்யன் நாவல்களைப் படிக்காதவன் பிறக்கும்போதே முதியவனாகப் பிறந்தவனாக இருந்திருப்பான். அந்த அளவுக்கு சாண்டில்யன், சிருங்கார வலை வீசி இளைஞர்களையும், சரித்திரம் படிக்க வைத்த தூண்டில்யன். வர்ணனையில் அவர் சரித்திரம் படைக்க வந்த காளிதாசன்.

● எஸ்.முத்துக்குமாரசுவாமி, மயிலாப்பூர்

***சமய உணர்வில்லையேல் இலக்கியமில்லை என்ற கருத்து பற்றி?***

எந்தச் சமயத்துக்கும் ஏற்ற உணர்வை அளிப்பதே இலக்கியம்.

● த.புகழேந்தி, கூகூர்

***நிம்மதி இல்லை. என்ன செய்வது கிரேஸி?***

'நிம்மதி இல்லை' எனச் சொல்வது நமுட்டு விஷமக்காரனான நம் மதி. 'மதியார்' தலைவாசல் மிதிக்க வேண்டாம்.

● எடக்காடு பீ.சேகர், ஊட்டி

***ஆடிக்குப் பின்னே ஆவணி; தாடிக்குப் பின்னே?***

Shaveவ் நீ!

● ஷோபனா, சென்னை

***என்ன கிரேஸி, இப்படி குருவி தலையில பனங்காயை வைச்சு கஷ்டப்படுத்தறாரே கடவுள்?***

'காக்க காக்க' கடவுள், பனங்காய் வைக்கும் பட்சத்தில், நிச்சயமாக குருவியைக் கழுகாக மாற்றுவார். பொறுமையைக் 'காக்க காக்க...'

● சௌம்யா, சிதம்பரம்

***கல்வியா? செல்வமா? வீரமா?***

கேள்வியா? பதிலா? மௌனமா... ஒன்றில்லாமல் மற்றொன்று உருவாகுமா?

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி

***உப்பிட்டவரை உள்ளளவும் நினை... சர்க்கரை இட்டவரை..?***

கொள்ளு தாத்தா, தாத்தா, அப்பா என பரம்பரையாக வருவது சொத்து மட்டுமல்ல ''ஷுகரும்'' கூடத்தான். ஆக சர்க்கரை இட்டவரின் சந்ததி என நினை.

● அ. யாழினி பர்வதம், சென்னை.

***பால்யப் பருவத்தில் எனக்குப் பிடித்த பத்திரிகை கோகுலம்... எங்க அம்மாவுக்குப் பிடித்த பத்திரிகை கண்ணன்.. தங்களுக்கு...?***

சுத்தி வளைச்சு நாசூக்காக என் வயசைத் தெரிஞ்சுக்க பாக்கறீங்க. உங்களுக்குப் பிடிச்ச பதிலையே சொல்கிறேன். கண்ணனுக்கும் முன் வந்த 'அம்புலி மாமா' 'எனக்குப் பிடிச்ச பத்திரிகை. திருப்தியா...! ●





கல்கி



2008 செப்டெம்பர் 28
ஸர்வதாரி புரட்டாசி 12
மலர் : 67
இதழ் : 9

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

# அரசியல்வாதிகள் வைக்கும் வெடிகுண்டு!

தலைநகரில் நடந்த தொடர்குண்டுவெடிப்புக்கு, சிவராஜ் பாட்டீல் பொறுப்பேற்க வேண்டும் என்று கூட்டணிக் கட்சியினரே கடிந்து கொள்கிற நிலைமை எழுந்துள்ளது. ஆனால், இந்தக் குண்டுவெடிப்பு நிகழும் வரை காங்கிரஸும் கூட்டணிக் கட்சிகளும் என்ன செய்துகொண்டிருந்தன? குஜராத்தில் இதேபோன்ற சோகம் சில வாரங்களுக்கு முன்பு நிகழ்ந்தபோது, மோடி ஆட்சியை விமர்சித்ததோடு சரி; மத்திய அரசில் அங்கம்வகிப்போர் யாருமே, தலைநகரம் பயங்கரவாதிகளின் அடுத்த இலக்காக இருக்கும் என்று எதிர்பார்க்க வில்லை. லட்சக்கணக்கில் நஷ்டஈடு அறிவித்துவிட்டு, கம்ப்யூட்டர் துணையுடன் குற்றவாளிகளின் படங்களை வெளியிட்டுவிட்டு, சில நாட்களுக்கு நாடெங்கும் மெட்டல் டிடெக்டர் கொண்டு சோதனை நிகழ்த்துவது வாடிக்கையாகிப் போய்விட்டது. பாதுகாப்புத் தீவிரம் மெல்ல மெல்லத் தேய்ந்து குறைகிற நேரத்தில், பயங்கரவாதிகள் மீண்டும் அசுரத்தனமாகத் தாக்குகிறார்கள்! பாதுகாப்பு இயந்திரமும் சரி, உளவுப் பிரிவும் சரி, படுதோல்வியுறுகின்றன.

தலைநகரத் தாக்குதலுக்குப் பொறுப்பேற்ற இந்திய முஜாஹிதீன் அமைப்பு வெளியிட்டுள்ள அறிக்கை, "முஸ்லிம்களிடம் மாறாத வெறுப்பு கொண்ட இந்தியர்கள் மீது கொலைவெறித் தாக்குதல்கள்

தொடரும்'' என்றும், ''அடிபட்டவர்களின் காயம் ஆறுவதற்கு முன் மீண்டும் மீண்டும் தாக்கித் துன்புறுத்திக் கொடுமை செய்வோம்'' என்றும் சத்தியம் செய்கிறது. கொலைகள் அவர்களது 'இறைவனுக்குக் காணிக்கை' என்றும் சொல்கிறது!

இத்தகைய வெறியைத் தூண்டக் கூடிய வேரைக் களைவதால் மட்டும்தான் பயங்கரவாதத்துக்கு முடிவு கட்ட முடியும். சட்டத்தைக் கடுமையாக்குவதால் மட்டும் பயங்கரவாதம் பணிந்து விடாது.

மனித உரிமைச் சட்டங்கள் மிக வலுவாக உள்ள அமெரிக்காவிலேயே, பயங்கரவாதத்தைப் பெருமளவுக்குக் கட்டுக்குள் கொண்டுவந்தது எப்படி என்று கவனித்தோமானால், அவர்களது உளவுத் துறையின் திறமையான, அரசியல் தலையீடற்ற செயல்பாடே அதற்குக் காரணம் என்பது புரியும். நம் நாட்டிலும் அது சாத்தியமாக்கப்பட வேண்டும். உளவுத்துறை இடையூறின்றிச் செயல்பட அனுமதிக்கப்பட வேண்டும். உளவுத்துறை அறிக்கைகளை மதித்து, உரிய முக்கியத்துவம் அளித்து இயங்க அரசு இயந்திரம் முன்வர வேண்டும். பல்வேறு மாநில அரசுகளிடையே இதற்கான ஒத்துழைப்புக்கு வழிவகை செய்யப்பட வேண்டும். பயங்கரவாதம் ஒரு தேசியப் பிரச்னை என்கிற நோக்கில், முஸ்லிம்கள் உள்பட, அனைத்துத் தரப்பினரும் ஒத்துழைக்க வேண்டும்.












இந்த ஒத்துழைப்பைப் பெறுவதற்குச் சாணக்கியம், தீர்கதரிசனம், மனிதநேயம் ஆகிய மூன்றையும் கைக்கொண்டு, தீர்வுகாண வேண்டும்.

''நாங்கள் ஆட்சிக்கு வந்தால் அஃப்ஸல் குருவுக்குத் தூக்குத் தண்டனையை நிறைவேற்றுவோம்'' என்று சூளுரைப்பதும் சரி; ''சிறுபான்மையினருக்குக் காலவரையின்றி மேலும் மேலும் சலுகைகளை அளிப்போம்'' என்று மிதம் மிஞ்சுவதும் சரி, முற்றிலும் உதவாத அணுகுமுறைகள். வோட்டு பெறுவதற்காக இவ்வழிமுறைகளைக் கையாளும் அரசியல்வாதிகள், நாட்டின் பாதுகாப்புக்கு வேட்டுதான் வைக்கிறார்கள்! ○

சேனல்

# காக்கிகளின் கூட்டணி!

'தல' என்று குறிப்பிடப்படும் உதவி போலீஸ் கமிஷனர் மதியழகன் டீம் லீடர். ராகவன் ரொம்ப கூல் டைப்; புலனாய்வில் நிபுணன். அடுத்தவன் அர்ஜுன். க்ரைம்களைக் கண்டுபிடிக்க தொழில்நுட்ப சௌகரியங்களைப் பயன்படுத்துபவன். ட்ரிகர் ஞானவேல், ப்ரமோஷனில் மேலே வந்த என்கவுன்ட்டர் ஸ்பெஷலிஸ்ட். இந்த டீமில் ஒரு பெண்ணும் உண்டு, அவள்தான் தமயந்தி. செல்லப் பெயர் டெரர். இவர்கள் ஐந்து பேரும் கொண்ட விறுவிறு, சுறுசுறு த்ரில்லர் சீரியல்தான் காக்கி. விஜய் டி.வி.யின் லேட்டஸ்ட் சென்சேஷன். சுமார் முப்பது ஆண்கள், ஏழெட்டுப் பெண்கள் என்று சலித்து, கடைசியில் இந்த ஐந்து பேரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.



"அரைத்த மாவையே அரைக்காமல், கொஞ்சம் வெளியில் வந்தீர்களே!" என்று விஜய் டி.வி.யில் நிகழ்ச்சித் தயாரிப்பின் தலைமைப் பொறுப்பில் உள்ள பிரதீப்பைக் கேட்டால், "எங்கள் சேனலின் கனாக் காணும் காலங்கள், மதுரை போன்ற தொடர்கள் வழக்கத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டு அமைந்ததால், நல்ல வரவேற்பைப் பெற்றன. அதுபோல, இதுவரை தொடாத ஒரு புது சப்ஜெக்ட் இந்தக் 'காக்கி'" என்கிறார்.

கதை என்ன? ஒரு ரௌடியை போட்டுத் தள்ள என்கவுன்டர் திட்டமிடப்படுகிறது. ஸ்பாட்டில் எதிர்பாராத விதமாக ஓர் அப்பாவி கணவன் - மனைவி குறுக்கே வந்துவிட, கணவன் துப்பாக்கி குண்டுக்குப் பலியாகிறான். குற்ற உணர்வு மேலிடும் போலீஸ் அதிகாரி, அந்த விதவையிடம் தன் நிலையை விளக்கிச் சொன்னாலும், அவளோ அந்த அதிகாரியைக் கொலையாளி போலவே பார்க்கிறாள். அவனுக்கோ, அவள் மீது ஏற்படும் பரிதாபம், நாளடைவில் காதலாகிறது. இப்படி ஒரு டிராக்.

'தல' மதியழகன் தன் டீமை எப்படி உருவாக்குகிறார் என்பதே ஒரு சுவாரஸ்யமான கதை. ஒவ்வொருவரின் கடமையுணர்வு, குடும்பப் பாசத்தால் எப்படி சோதனைக்குள்ளாகிறது? என்று நகர்கிறது காக்கி தினசரி சீரியல். "இப்போதைய பிளான்படி, குறைந்தது ஆறு மாசம் ஒளிபரப்பாகும்" என்கிறார் பிரதீப்.

**- எஸ். சந்திரமௌலி**




BLB ESTATES P LTD

# உயர் மதிப்பிலான மனைகள் நெடுஞ்சாலைக்கு மிக அருகில்

## ஸ்ரீ ஹயக்ரீவா நகர்

**(D.T.C.P. APPROVAL No. 117/2007)**

## மஹிந்த்ரா வேர்ல்டு சிட்டிக்கு மிக அருகில்

மஹீந்திரா வேர்ல்ட் சிட்டி அமைந்துள்ள இடத்திற்கு அருகில் உள்ள BLBயின் ஸ்ரீ ஹயக்ரீவா நகர் மிகக் குறுகிய காலத்தில் அதிக மதிப்புடன் கூடிய வளர்ச்சியைக் காண உள்ளது. மஹீந்திரா வேர்ல்ட் சிட்டியில் சுமார் 1.5 லட்சம் மக்கள் விரைவில் வேலை வாய்ப்பு பெற இருப்பதாலும் அதற்கேற்ப வீட்டு வசதித் தேவை அதிகரிப்பதாலும் உங்கள் மனையின் மதிப்பு மகத்தான விதத்தில் உயரும் வாய்ப்பு உள்ளது. மேலும், அமைதியான மற்றும் ரம்யமான சூழ்நிலையில் அமைந்துள்ள இம்மனைப்பிரிவில் உடனே வீடு கட்டி குடியேறத் தோன்றும்




சிறப்பம்சங்கள்:

✓ தார் சாலைகள் ✓ முழுவதும் வேலியிடப்பட்டது ✓ உடனே வீடு கட்டலாம் ✓ சுற்றிலும் வீடுகள் ✓ சுவையான நிலத்தடி நீர் ✓ இரயில் மற்றும் பஸ் வசதியுடன் கூடியது ✓ தெளிவான பத்திரங்கள் ✓ 5 ஆண்டுகள் பாதுகாப்பு சேவை



இலவசமாக மனையைப் பார்வையிட அழைக்கவும் :

**28345104 / 05 / 06**




SUNDARAM BNP PARIBAS HOME FINANCE

# BLB ESTATES PRIVATE LIMITED

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road), T.Nagar, Chennai - 600 017. E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

COIMBATORE MARKETING OFFICE: 1105, Trichy Road, (Adj. to AIR), Ramanathapuram, Coimbatore - 641 045. Uma: Ph: 0422-4395609 / 99943 52003

**நன்மதிப்பில் முதலீடு**

புதுவை கந்தப்ப முதலியார் வீதியிலுள்ள அந்த நடுத்தர வீடு, 'முதல்வர் வீடு' என்ற அடையாளங்கள் ஏதுமில்லாமல் இருக்கிறது. மாடியில் நெருக்கடியான அறை ஒன்றில், விசிட்டர்களைச் சந்திக்கிறார் முதல்வர் வைத்திலிங்கம். 1991-96ல் புதுச்சேரி முதல்வராக இருந்தவருக்கு, மீண்டும் அடித்திருக்கிறது சான்ஸ்...



# ரங்கசாமியோடு மோதல் ஏன்?

## – முதல்வர் வைத்திலிங்கம் விளக்கம்

**மீண்டும் முதல்வர்:** முன்பெல்லாம், 'எங்கள் கிராமத்துக்குச் சாலை வசதி வேண்டும்' என்று மக்கள் வருவார்கள். மண்சாலை, தார் சாலையாகி, இப்போது சிமெண்ட் சாலையாகி விட்டது. கல்வி, சுகாதாரம் என்று வேறு எந்தத் துறைகளை எடுத்துக் கொண்டாலும், அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. எனவே, மக்கள் இப்போது பொறுப்பிலிருக்கும் அரசியல்வாதிகளை, தொண்ணூறு சதவிகிதம் நாடுவது, தங்கள் சொந்தத் தேவைகள்

## புதுவை கச்சேரி

பதவியிலிருந்து விலகியபின், மீடியாக்களில் வாயைத் திறக்காமல் இருந்த முன்னாள் முதல்வர் ரங்கசாமி, முதன்முறையாக நம்மோடு பேசினார்...

"நான் பதவியில் இருந்தபோது நிறைவேற்றிய காரியங்கள் மனத்துக்குத் திருப்தியளிப்பதாக இருக்கின்றன. குறிப்பாக காமராஜ் வீடு கட்டும் திட்டம்; ராஜிவ்காந்தி காலை சிற்றுண்டித் திட்டம்; காமராஜ் உயர்கல்வி உதவித் திட்டம்; இலவச அரிசி போன்றவை, கட்சியின் செல்வாக்கை மேன்மேலும் உயர்த்தின.

'நன்றாகத்தானே செயல்பட்டு வந்தீர்கள்?' என்று என்னைப் பலரும் துக்கம் விசாரிக்கிறார்கள். புதுவையில் உடனிருந்து காலை வாரும் வேலை, ஒரு மரபாகவே நடந்துவந்தது. கடந்த சில வருடங்களாகக் காணாமல் போயிருந்த அந்தக் கழுத்தறுப்பு வேலை மீண்டும் அரங்கேறியிருக்கிறது. ஆனால், நான் காங்கிரஸ் மேலிடம் எடுக்கும் முடிவுக்குக் கட்டுப்படுவேன். தனிக்கட்சி துவங்குவேன் என்றெல்லாம், என்னைப் பற்றி வதந்திக் கிளப்பியிருக்கிறார்கள். நான் என்றும் காங்கிரஸ் தொண்டன்தான். காமராஜ் பக்தன்தான். இப்போது ஒரு சட்டமன்ற உறுப்பினராக என் பணியைத் தொடர்வேன். காழ்ப்புணர்ச்சி காரணமாக

குறித்த சிபாரிசுக்காகத்தான். இதை ஒரு குறையாகப் பார்க்க முடியாது.

**சதி செய்யும் நிதி:** தேர்தல் அறிக்கையில் சொன்னதைப் பாதியளவு நிறைவேற்றியிருந்தாலும், மீதியை நிறைவேற்ற தடுமாறிக்கொண்டிருக்கிறோம். அதற்குக் காரணம் எங்களை நெருக்கிப் பிழியும் நிதி நிலைதான். புதுவையின் 1,750 கோடி பட்ஜெட்டில் கணிசமான நிதி, வாங்கிய கடனுக்கு வட்டி கொடுக்கவே சரியாக இருக்கிறது. பிரதமரிடம் கூடுதல் நிதிக்கான கோரிக்கை வைத்திருக்கிறோம்.

**முடங்கிப்போனதா தொழில்:** பத்து, பதினைந்து வருடங்களுக்கு முன்பு, ஆர்வமாக வந்து தொழில்கள் துவங்கிய பலர், நடத்தமுடியாமல், மூடிவிட்டுச் சென்றிருக்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால், இந்தக்கால கட்டத்தில் தகவல் - தொழில்நுட்பம் மற்றும் அதைச் சார்ந்த தொழில்கள் வேலை வாய்ப்புக்கான களமாகிவிட்டன. இந்த ரீதியில் பார்த்தாலும் புதுவையின் வளர்ச்சி குறைவுதான். அதற்கு, மிக முக்கிய காரணம், தமிழ்நாட்டின் நிழல்போல புதுவை இருப்பதுதான். நிஜமான வளர்ச்சி தமிழ்நாட்டுக்குக் கிடைக்க, புதுவை ஒதுக்கப்பட்டிருக்கிறது. சேதுராவேட் என்ற இடத்

**"பல மாதங்களாக அமைச்சர்களுக்கு நேர்ந்த மோசமான அனுபவங்களின் வெளிப்பாடுதான், ரங்கசாமியை மாற்ற வேண்டுமென்று கட்சி மேலிடத்தை முடிவெடுக்கத் தூண்டியது!"**



*என் மீது குற்றச்சாட்டுக்களை வைக்கிறார்கள். ஆனால், என் வாழ்க்கை திறந்த புத்தகம் என்பது புதுவை மக்களுக்குத் தெரியும்.*

*என் தொகுதியில் (தட்டாஞ்சாவடி) அரசு மருத்துவமனையைத் துவங்கி, கோடிக்கணக்கில் நிதி ஒதுக்கியதைச் சர்ச்சையாக்குகிறார்கள். மிகக் குறைந்த விலைக்கு இங்கேதான் நிலம்*

# காலை வாரும் கலாசாரம்!

***– ரங்கசாமி காரசாரம்***



தெரியும் வகையில் புதுவையின் வளர்ச்சி இருக்கும்.

**ரங்கசாமியுடன் மோதல் ஏன்?:** குறிப்பிட்ட காரணம் என்று எதுவும் கிடையாது. பல மாதங்களாக அமைச்சர்களுக்கு உண்டான, மோசமான அனுபவங்களின் ஒட்டுமொத்த அழுத்தத்தின் வெளிப்பாடு

தில் 800 ஏக்கரில் சிறப்புப் பொருளாதார மண்டலம் வர விருக்கிறது. தகவல் தொழில்நுட்பம் உட்பட பல நிறுவனங்கள் வரவிருக்கின்றன. விமான நிலையம் செயல்பட இருக்கிறது. காரைக்காலில் துறைமுகம் திறக்கப்படவிருக்கிறது. அடுத்த இரண்டு வருடங்களில், எல்லோருடைய ஒத்துழைப்புடன் கண்ணுக்குத்

தான், ரங்கசாமியை மாற்றவேண்டுமென்று முடிவெடுக்க கட்சி மேலிடத்தைத் தூண்டியது. உதாரணம் சொல்கிறேன். ஆனால், இதுவே முழுமுதற்காரணம் அல்ல. அமைச்சர்களாக இருந்த நாங்கள், பல திட்டங்களுக்காக, நிதி வேண்டி முதல்வரை அணுகினால் ஒன்றும் கிடைக்காது. ஆனால், அதேசமயம்,

கிடைத்தது. மேலும் இதுவரை 98 கோடிதான்(!) கல்லூரிக்குச் செலவிடப்பட்டிருக்கிறது. மருத்துவக் கல்லூரிக்கு 500 கோடிதான் செலவாகும் என்றாலும், மொத்தமாக இந்தத் தொகை

போட்டுவிட்டது போல புலம்புகிறார்கள். 'தனியார்கள் சின்ன மாநிலத்தில் ஆறு மருத்துவக் கல்லூரிகள் நடத்தும்போது, அரசு சார்பில் தனிக் கல்லூரி தேவைதானா?' என்று

**"புதுவையில், காலை வாரும் வேலை, ஒரு மரபாகவே நடந்து வந்தது. கடந்த சில வருடங்களாகக் காணாமல் போயிருந்தது. மீண்டும் அரங்கேறியிருக்கிறது!"**

ஒரே வருடத்தில் செலவிடப்படமாட்டாது. வருஷா, வருஷம் நிதி ரிலீஸ் பண்ணுவோம். ஏதோ புதுச்சேரியின் மொத்த வருமானத்தையே கொண்டு மருத்துவக் கல்லூரியில்

கேட்கிறார்கள். அரசு சார்பில் நடத்தும்போது, அதற்குரிய கௌரவமும், மாநிலத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு மொத்த இடங்களும் கிடைக்கும். என் தொகுதிக்குத் தனி கவனம்

ரங்கசாமி தொடர்பான திட்டங்களோ அல்லது அவரது தொகுதியான தட்டாஞ்சாவடி வளர்ச்சிப்பணிகளோ, எந்தவித தங்குதடையுமின்றி நடக்கும். மக்களைச் சந்திக்கமுடியாத நிலைக்குத் தள்ளப்பட்டோம். அவருடன் இணைந்து பணியாற்றுவதில் நடைமுறைச் சிக்கல் ஏற்பட்டுவிட்டது. எந்தவித கலந்தாலோசனையும் இல்லாமல், அவர் ஆட்சி செய்துகொண்டிருந்தார். அவர் தொகுதியில், அரசு மருத்துவக் கல்லூரி துவங்கி, அதற்குக் கோடிக்கணக்கில் நிதி ஒதுக்கீடு செய்தார். அமைச்சரவையைக் கூட்டி முடிவெடுப்பது கிடையாது. ஒரு கட்டத்தில் அவருக்கும், மற்ற அமைச்சர்களுக்கும் பேச்சு வார்த்தையே இல்லாமல் போனது. இந்த நிலை நீடிப்பது சரியல்ல என்று மேலிடம் உடனே முடிவெடுத்து அவரை மாற்றியது.

**"நிஜமான வளர்ச்சி தமிழகத்துக்குக் கிடைக்க புதுவை ஒதுக்கப்பட்டிருக்கிறது!"**

**காங்கிரஸ் வளர்கிறதா?:** புதுவையில் கட்சிகளைத் தனிப்பட்ட விதத்தில் பார்த்தால், உறுதியான கட்டமைப்பு கொண்டது காங்கிரஸ் மட்டுமே. தனிப்பெரும்பான்மையுடன் ஆட்சியைக் காங்கிரஸ் நடத்தினால், சில சுதந்திரமான முடிவுகள் எடுத்து, புதுவை மாநிலத்தின் வளர்ச்சிக்கு மேலும் பங்களிப்பைச் செய்யமுடியும். ஆனால், தமிழ்நாட்டில், கட்சி என்ன முடிவெடுக்கிறதோ அந்த அடிப்படையிலேயே இங்கும் தேர்தலைச் சந்திக்க வேண்டி வருகிறது. புதுவைக்கு என்று சில விசேஷ அம்சங்கள் உண்டு. அவற்றுக்கேற்ப இங்கு நாங்கள் அரசியல் நடத்தவேண்டும். இது குறித்து காங்கிரஸ் மேலிடத்தில் எங்கள் கருத்துக்களைச் சொல்கிறோம்.

*செலுத்தவில்லை. என் தொகுதி நிதியை, பைசா வீணாக்காமல், அப்படியே தொகுதிக்குச் செலவு செய்கிறேன். மற்றபடி, பல தொகுதிகளுக்குப் பொதுவான திட்டங்களுக்கு என்ன ஒதுக்கீடு செய்யப் படுகிறதோ, அதே அளவுதான் எனது தொகுதிக்கும் செய்யப்பட்டிருக்கிறது. தவிர, மற்ற அமைச்சர்களின் இலாக்காக்களுக்கு நிதி உதவவில்லை என்று சொல்லுவதும் சரியல்ல. நிதியாண்டு முடியும் சமயத்தில், பல்வேறு இனங்களில் (head) செலவுகளைப் பார்த்து, கையிருப்பில் உள்ள நிதியைப் பொறுத்து, இனங்களை மாற்றி நிதிநிலை ஒதுக்குவோம். இது வருடாவருடம் நடப்பதுதான். ஆனால், காலை வாருவது என்று முடிவெடுத்தபிறகு எதையாவது காரணத்தைத் தேடவேண்டுமே!''*



சந்திப்பு: **ப்ரியன்**

# பாகிஸ்தான் இடத்தில் ஆஸ்திரேலியா!



**பா**கிஸ்தான் கிரிக்கெட்டுக்கு, இப்படி யொரு நிலைமை ஏற்பட்டிருக்க வேண்டாம். கடந்த ஒரு வருடமாக பாகிஸ்தான் வீரர்கள் யாரும், டெஸ்ட் மேட்ச் ஆடிப் பழகவில்லை. யாராவது எங்களோடு சேர்ந்து ஆடுங்களேன் என்று பாகிஸ்தான் வாரியம், ஒவ்வொரு நாடாகக் கெஞ்சிக் கொண்டிருக்கிறது. சமீபமாக நடந்த இந்தியா-பாகிஸ்தான் ஆட்டங்கள் உப்புசப் பின்றி இருந்ததால், பாகிஸ்தான் இடத்தைச் சாமர்த்தியமாக ஆஸ்திரேலியா பிடித்துக் கொண்டது. பாருங்கள், அடுத்த மாதம் நடக்கவுள்ள இந்தியா - ஆஸ்திரேலியா தொடருக்கு இப்போதிருந்தே ரசிகர்கள் மத்தியில் காய்ச்சல் அடித்துக்கொண்டிருக்கிறது.



* சிமெண்ட்ஸ்

சில மாதங்களுக்கு முன்னால், தென் ஆப்பிரிக்கா இந்தியாவுக்கு வந்து மூன்று டெஸ்டுகள் ஆடிவிட்டுப் போனது. பேச்சு மூச்சு இல்லை. ஆனால், இந்தியா-ஆஸ்திரேலியா என்றவுடன் தானாகத் தீப்பொறி பறக்கிறது. முதல் பரபரப்பு - கங்குலி நீக்கம். அதற்குள் சிமெண்ட்ஸ் மீன்பிடிக்கச் சென்று, ஆஸ்திரேலிய அணியின் குட்டையைக் குழப்ப, அடுத்த கணமே அவரை அணியிலிருந்து நீக்கிவிட்டார்கள்.

இந்தியா - பாகிஸ்தான் பரபரப்புகளை ஆரம்பித்துவைத்தவர் மியாண்ட்டாட். அவருடைய கடைசி பந்து சிக்ஸருக்குப் பிறகுதான் இந்தியா-பாகிஸ்தான் ஆட்டங்கள் களைகட்டின. ஒரு வெறியோடு வீரர்களும் ரசிகர்களும் பாகிஸ்தானுடனான போட்டிகளை எதிர்கொண்டார்கள். 2001ல், கொல்கத்தா டெஸ்ட்டில் ஆஸ்திரேலியாவுக்கு எதிராக, திராவிடும் லஷ்மணும் நாள் முழுக்க ஆடி இந்தியாவைச் சரிவிலிருந்து காப்பாற்றிய கணத்தில் புதிய அத்தியாயம் தொடங்கப்பட்டது. 2004ல் ஒரு முடிவோடு இந்தியாவுக்கு வந்த ஆஸ்திரேலிய அணி, முப்பத்தைந்து வருடங்களுக்குப் பிறகு முதல் முறையாக இந்திய மண்ணில் டெஸ்ட் தொடரை

வென்று பழிக்குப் பழிவாங்கியது.

சிமெண்ட்ஸைப் போல உலகில் அத்தனை திறமைகள் வாய்க்கப்பெற்ற வர் யாரும் இல்லை. ஐ.பி.எல். ஏலத்தில் தோனிக்குப் பிறகு அதிக விலைக்குப் பேசப்பட்டவர். ஆஸ்திரேலிய அணி நெருக்கடிகளுக்கு ஆளாகும் தருணங்களில் ஆபத்பாந்தவனாக அணியைக் காப்பாற்றும் வல்லமை படைத்தவர். மைதானத்தில் அதீத ஒழுங்கைக் கடைபிடிக்கும் சிமெண்ட்ஸ் ஆடுகளத்துக்கு வெளியே ஒழுங்கற்று இருப்பதால் நேர்ந்த சிக்கல் இது. ஹர்பஜனுடன் மட்டுமல்ல; பலமுறை தன் சக வீரர்களிடம் வாய்ச்சண்டையில் ஈடுபட்டிருக்கிறார். பாண்டிங், ஹேடன் இல்லாத பங்களாதேஷ் டூரில் அணியின் இளம் கேப்டன் கிளார்க்குக்குப் பக்கபலமாக இல்லாமல், பொறுப்பற்று நடந்துகொண்டதால் சிமெண்ட்ஸ் நாட்டுக்குத் திரும்ப அனுப்பப்பட்டார்.



✱ ரிக்கி பாண்டிங்

எனவே, பாதுகாப்பு காரணம் காட்டி பல ஆண்டுகளாக பாகிஸ்தானில் கால் பதிக்காமல் இருக்கிறது ஆஸ்திரேலிய அணி. கடந்த ஒரு வருடத்தில் பாகிஸ்தானைவிட இந்தியாவில்தான் அதிக இடங்களில் குண்டு வெடித்துள்ளது. ஆனாலும் ஆஸ்திரேலியா டூரைத் தள்ளிப் போடாது. சமீபத்தில் ஆஸ்திரேலியா சென்றபோது இந்தியா சொடக்கு போட்டு தன் பல காரியங்களை நிறைவேற்றிக்கொண்டது. 'பக்னரை வெளியே அனுப்பு. ஹர்பஜனை விட்டுவிடு' என்று இந்தியா கட்டளையிட அத்தனைக்கும் தலையாட்டியது ஆஸ்திரேலியா. இந்தியா வளர்ந்துவரும் நாடுதான் என்றாலும் கிரிக்கெட்டில் அது வல்லரசு. இந்தியாவுடனான போட்டியைத் தவிர்ப்பதால், இழப்பு ஆஸ்திரேலியாவுக்கே தவிர இந்தியாவுக்கு அல்ல. சென்றவாரம் பாகிஸ்தான் - ஸ்ரீலங்கா தொடருக்கு தொலைக்காட்சி நிறுவனங்கள் எந்த ஆர்வமும் காட்டவில்லை என்றொரு செய்தி வந்தது. அடிமாட்டு விலைக்கு ஒளிபரப்பு செய்ய முன்வந்தார்கள். இந்தியா போல ரசிகர்கள் ஆதரவு கிடைக்காது என்பதால், ஏற்பட்ட பாதிப்பு இது. ஆகவே, என்ன நடந்தாலும் இந்தியாவுக்கு அணியை அனுப்புவதில் ஆஸ்திரேலியாவுக்கு எந்தத் தடங்கலும் இருக்காது. ●


✱ கங்குலி

தமது அடுத்த ப்ராஜெக்ட் குறித்து நம்மோடு பேசுகின்றனர் நடிகர் ரமணா, டைரக்டர் சபீர் ஹுசைன், சிவசக்தி பாண்டியன்.

**ரமணா:**

"நான் நடிச்ச 'நாயகன்' படம் ஐம்பதாவது நாளை நெருங்கி ஓடிக்கிட்டிருக்கு. எனக்கு அந்தப் படத்துல நடிக்க வாய்ப்பளிச்ச இயக்குநருக்கு நன்றி. என்னோட அடுத்த படமா 'அஜந்தா' ரெடியாகிக்கிட்டிருக்கு. தமிழ், தெலுங்கு, மலையாளம்னு... ஐந்து மொழிகள்ல அந்தப் படம் ரெடியாகறதுனால 'அஜந்தா' எனக்கு மிகப் பெரிய ப்ரேக்கா இருக்கும். 'அஜந்தா' படத்தோட இசை இளையராஜா ஸார். இசையைப் பத்தி அவர் பேசும்போது, '16 வயதினிலே, சேது... போன்ற படங்களுக்குப் பிறகு எனக்குத் திருப்தி தர்ற படம்னா அது 'அஜந்தா' படம்தான்'னு சொல்லியிருக்கார். என்னோட அப்பா

# ஐந்து மொழிகளில்

**சிவசக்தி பாண்டியன்:**

"நாலு வருட இடைவெளிக்குப் பிறகு 'சூரியன் சட்டக் கல்லூரி' என்கிற ஆக்ஷன் படத்தோட களத்துக்கு வந்திருக்கேன். 'சிவசக்தி' படம்னாலே மென்மையான கதை, வன்மையான பாச உணர்வுகள்னு படம் முழுக்கக் கோலோச்சும். என் படத்தைப் பார்த்துட்டு யாரும் முகம் சுளிச்சதா பேச்சே கிடையாது. அப்படி இருந்ததால்தான் என் தயாரிப்புல, காதல் கோட்டை, கடல் பூக்கள் இரண்டு படங்களுக்கு தேசிய விருது வாங்க முடிஞ்சது. அது மாதிரிதான் 'சூரியன் சட்டக் கல்லூரி' படமும். ஒரு சராசரியான சட்டக் கல்லூரி மாணவனை, ஒரு மாநகராட்சித் தேர்தல் எப்படி மாத்துதுங்கறதுதான் கதை. இந்தப் படத்துல தேவாவின் இசையில் 'கபிலன்' ஒரு பாட்டு எழுதியிருக்கார். எழுதி வச்சுக்கங்க. 'ஒவ்வொரு பூக்களுமே' பாடலை எப்படி பள்ளிக்கூடங்களில் கடவுள் வாழ்த்தா வைச்சாங்களோ அதுபோல இந்தப் பாட்டும் பேசப்படும். முக்கியமா இது என்னோட கதை. கடந்த மூன்று வருடமாக மனசுக்குள்ள இருந்து என்னையே அரிச்சுக்கிட்டிருந்தது. அதை 'பழனியப்பா கல்லூரி' படத்தோட டைரக்டர் கையில ஒப்படைச்சேன். அவர் சிற்பமா செதுக்கியிருக்கார். நிச்சயமாக இந்தப் படம் குடும்பத்தோட வந்து பார்த்து ரசிக்கிற படமா இருக்கும் என்பது மட்டும் உறுதி!"



விஜய்பாபு, 'நான்தான் நடிக்க வந்து கஷ்டப்பட்டேன். நீயும் நடிக்கணுமா'ன்னு கேட்டவர், இன்று என்னோட நடிப்பைப் பார்த்துட்டு, 'நீ எடுத்த முடிவு நல்ல முடிவு. இன்னும் ஹார்ட் ஒர்க் பண்ணு'ன்னு சொன்னார். அவர் சினிஃபீல்டுல சம்பாதித்து வைச்சிருக்கிற பேர் கெடாம பாத்துக்குவேன்.''



# அஜந்தா!

**டைரக்டர் சபீர் ஹுஸைன்:**

"பத்திரிகையாளன் வாழ்க்கையில், பன்னிரண்டு மணி நேரத்துக்குள் நடந்து முடிகிற சம்பவங்களோட தொகுப்பை விறுவிறுப்பாகக் கொடுக்கப்போற படம்தான் குடியரசு. இந்திய அரசியல் சாசனம் பத்திரிகைக்குக் கொடுத்திருக்கிற சுதந்திரம் அளப்பரிது. அதைப் பயன்படுத்தி, ஒரு நாட்டை எந்தளவுக்குச் சீர்படுத்தமுடியும் என்பதை இந்தப் படத்தில் காட்டியிருக்கிறோம். 'குடியரசு'ன்னு படத்துக்கு ஏன் பேர் வெச்சேன்னா தந்தை பெரியார், கார்ல் மார்க்ஸ் போன்ற பெரியவர்கள் இந்தப் பெயரில்தான் பத்திரிகை நடத்தி நல்லது பண்ணினாங்க. நல்லது செய்வதற்கான ஒரு குறியீடுதான் குடியரசு. அதுக்காக இந்தப் படத்துல 'காதல்' சம்பந்தமான காட்சிகள் இருக்காதுன்னு நெனைக்காதீங்க. எல்லாமே சரிசமமா இருக்கும். ஹீரோவா நடிக்கும் விக்னேஸ் தன்னோட பேரை விக்னேஸ்வரன்-னு மாத்திக்கிட்டார். சன் மியூஸிக் தொகுப்பாளினி ஸ்ரீலேகா இதுல ஹீரோயின். தயாரிப்பாளர், இணை தயாரிப்பாளர் எல்லாருமே குத்துச்சண்டையில நேஷனல் லெவல் சேம்பியன். எனவே, இந்தப் படத்தில் சண்டைக் காட்சிகள்ல சிறப்பு கவனம் செலுத்தியிருக்கோம். குறிப்பாக சாமுராய் வாள் பயன்படுத்தப்பட்ட சண்டைக் காட்சி விறுவிறுப்பாகப் பேசப்படும்.''

– மோகனா

* 'குடியரசு' படத்தில்...



**பார்த்தால் பசி தீரும்:** உலக சரித்திரத்தில் ஆயிரம் அழகிகள் வந்துபோனாலென்ன? கிளியோபாட்ராவுக்குப் பிறகு, கனவு தேவதை அந்தஸ்து மர்லின் மன்றோவுக்கு மட்டும்தான்.

இறந்து நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆனபிறகும், மன்றோவுக்குத் தினந்தோறும் ரசிகர்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டேதான் இருக்கிறது.

1959ம் ஆண்டு மர்லின் மன்றோ நடித்து வெளிவந்த, 'சம் லைக் இட் ஹாட்' என்ற திரைப்படத்தின் படப்பிடிப்புக் காட்சிகள், சமீபத்தில் ஆஸ்திரேலியாவில் கிடைத்திருக்கின்றன. இரண்டரை நிமிஷங்கள் மட்டுமே ஓடக்கூடிய அந்த 'பிஹைஹன்ட் த ஸீன்' காட்சியை, மெல்போர்ன் நகரில் ஏலம் விடப் போகிறார்கள். அமெரிக்க மதிப்பில் இருபத்தைந்தாயிரம் டாலர்களைத் தாண்டி ஏலம் போகுமென எதிர்பார்க்கிறார்கள்.

படத்தில் அப்படி என்னதான் இருக்கிறது?

குர்திஸ் என்ற நடிகரோடு மன்றோ ஒத்திகை பார்க்கிறார். அதைச் சுற்றி நிற்பவர்கள் வேடிக்கை பார்க்கிறார்கள்.

மர்லின் மன்றோவைப் பார்த்தாலே பசியாறிவிடும் என்று சொல்பவர்களுக்கு இது போதாதா?



* மெக்னைன்



* மர்லின் மன்றோ

**உலகே மாயம்!**

**மெக்னைன் சபதம்:** அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ஹிலாரி கிளிண்டன், தவிர்க்க இயலாமல் போட்டியிலிருந்து விலகிக்கொண்டார். இப்போது பாரக் ஒபாமாவுக்கு ரூட் க்ளியர். ஆப்பிரிக்க வம்சாவளி என்ற இமேஜ் அவருக்கு நன்றாகவே கைகொடுக்கிறது. இதில் கதிகலங்கிப் போயிருக்கும் மெக்னைன், ஒபாமாவைப் போட்டியில் வீழ்த்த புது வியூகத்தைக் கையிலெடுத்திருக்கிறார்.



* ஸ்டூடன்ட் நம்பர் 1

'நான் ஆட்சிக்கு வந்தால் பின்லேடனைப் பிடித்துக் காட்டுவேன். பாருங்கள்' என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார்.

தேர்தல் என்றால் இந்தியாவில் மட்டுமல்ல, எல்லா நாட்டிலுமே ஆடி மாதத் தள்ளுபடியில் வாக்குறுதிகள் கிடைத்துவிடுகின்றன.

**அளவு குறைந்தால் நஞ்சும் அமுதாகும்:** 'அளவுக்கு மிஞ்சினால் அமுதமும்

நஞ்சு' என்ற பழமொழி வெகு பிரசித்தம். 'அளவு குறைந்த நஞ்சு அமுதாகும்' என்று சொல்கிறது, அழகுசாதனப் பொருட்களைத் தயாரிக்கும் லண்டன் நிறுவனமான 'பிளானெட் ஸ்கின் கேர்.'

இந்நிறுவனம், 'ஸ்டன்ஸ்' என்ற பெயரில் அறிமுகப்படுத்தியிருக்கும் சருமப் பாதுகாப்பு க்ரீம், லண்டனில் சக்கைப் போடு போடுகிறதாம். ஒவ்வொரு கடையிலும் தினசரி குறைந்தபட்சம் ஐம்பது பாட்டில்கள் விற்கின்றன என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.



# கட்டுவிரியனும் காணல் வாக்குறுதியும்

இந்த க்ரீமின் சிறப்பம்சம், பாம்புகளின் விஷத்தில் உள்ள அமினோ அமிலத்தைக் கொண்டு தயாரிக்கப்படுகிறது என்பதுதான். மலேஷிய நாட்டில் வாழும் கட்டு வீரியன் வகையைச் சேர்ந்த பாம்புகளிலிருந்து இதற்காக விஷம் எடுக்கப்படுகிறது.

பாம்பைக் கண்டால் 'படை'யும் நடுங்கும் என்பது எல்லா அர்த்தத்திலும் சரியாகத்தான் இருக்கிறது.

**ஸ்டூடன்ட் நம்பர் 1:** உலகிலேயே ஆங்கில மொழியைச் சிறப்பாகப் பேசக்கூடியவர்கள் யாரென்றால், அடுத்த நொடியே 'பிரிட்டிஷ்காரர்கள்' என்றுதான் பதில் வரும். என்னதான் ஸ்டைலாகப் பேசினாலும், அமெரிக்க ஆங்கிலத்துக்குக் 'கொச்சை மொழி' என்ற விமர்சனமுண்டு.

ஆனால், இப்போது நிலைமை மாறிவிட்டது.

இங்கிலாந்து பல்கலைக்கழகங்களில் படிக்கும் மாணவர்களுக்கு அடிப்படை மொழியறிவில், நிறுத்தக்குறிகளை உபயோகிப்பதில், வார்த்தைகளை உச்சரிப்பதில்... என்று ஏகப்பட்ட பிரச்னைகளாம். இதைச் சமாளிப்பதற்காக சில பல்கலைக்கழகங்களில் தனியாக ட்யூஷன் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

**ச**ரி... அப்படியென்றால் ஆங்கிலத்தைச் சரியாக உச்சரிப்பவர்கள் யாரென்று யோசிக்கிறீர்களா?

இங்கிலாந்து பல்கலைக்கழகங்களில் படிக்கும் காலனி நாட்டு மாணவர்கள்தான், இப்போது இங்கிலீஷில் நெம்பர் ஒன். இந்த வரிசையில் இந்தியாவுக்கும் இடமுண்டு என்பதால் நாமும் சந்தோஷப்பட்டுக்கொள்ளலாம். **– ஸாந்த்**

# கள்ளக்குறிச்சி எம்.பி.?



● ஜெகத்ரட்சகன் நடத்தும் தினசரி பத்திரிகையில் 'பீகார் வெள்ளத்துக்கு தமிழக அரசு பத்து கோடி ரூபாய் நன் கொடை' கொடுத்ததை, ஒரு கோடி என்று போட்டு விட் டார்கள். அதைப் படித்த முதல்வர், உடனடியாக ஜெகத்ரட்சகனை தொடர்பு கொண்டு, தவறைச் சுட்டிக் காண்பித்திருக்கிறார். கடுப் பான ஜெகத்ரட்சகன் தவறாகச் செய்தி வெளியிட்ட ஊழியர் களைக் கண்டிக்கும் விதத்தில் பத்திரிகையை மூடிவிட் டார். பத்திரிகையை நிரந் தரமாக நிறுத்திவிட்டதால், தமிழக அரசின் விளம்பரங் களைப் போட்டதற்கு, பணம் கிடைக்க தாமதமாகும் என்ற நிலையில் மீண்டும் துவக்கி யிருக்கிறார். மேலும், பா.ம.க., தி.மு.க. கூட்டணியில் இல்லாத நிலையில், வன்னியர் களை அரவணைக்கும் வகையில் 'தினசரி' வர வேண்டும் என்று சில தி.மு.க. அமைச்சர்களும் ஜெகத்தை நெருக் கினார்களாம்.

● சமீபத்தில் ஈரோட்டில் ஒரு திருமண நிகழ்ச்சியில் பேசிய வைகோ, 'தான் ஜெயலலிதா ஆட்சியில் 'பொடா' வில் வேலூர் சிறையில் இருந்தபோது, 'கலைஞர் வந்து பார்த்ததற்கு காரணம், தன்னை முடக்கிப் போடும் கெட்ட நோக்கத்தில்தானே தவிர, உண்மையான பாசம் காரணமாக அல்ல' என்று பேசியது அறிவாலயத்தில் கடும் எரிச்சலை உண்டாக்கியிருக்கிறது. ''கலைஞர் வேலூர் போவது குறித்துப் பேச்சு வந்தபோது பெரும் பாலான முன்னணி பிரமுகர்கள், 'நீங்கள் போகக்கூடாது; அவரை வளர்த்துவிடுவது தளபதியின் எதிர்காலத்துக்கு நல்லதல்ல' என்று வாதாடினோம். ஆனால், உண்மை யான பாசம் காரணமாக வேலூர் சென்றவர் தலைவர். வைகோ ஒரு சிறுமதியாளர் என்பது மீண்டும் நிரூபணமாகிவிட்டது'' என் கிறார், அப்போது கலைஞரிடம் 'வைகோவை பார்க் கப் போகக் கூடாது' என்று வாதாடிய ஒரு தி.மு.க. அமைச் சர்.


* செல்வகணபதி

● தி.மு.க.வில் இணைந்த செல்வகண பதி, சேலம் வட்டாரத்தில் தின மும், அ.இ.அ.தி.மு.க.வினரைக் கழகத்தில் இணைக் கும் நிகழ்ச்சிகளை நடத்தி கலக்கி வருகிறார். இதுவரை, மாவட்டத்தில் உள்ள முப்பத்திரண்டு ஒன்றியங்களில், பதினெட்டு ஒன்றிய அ.தி.மு.க. கூடாரத்தைக் காலி யாக்கி விட்டாராம் கணபதி. அவரின் சுறுசுறுப்பைக் கண்டு வியந்த ஸ்டாலின், 'உங்களுக்குக் கள்ளக்குறிச்சி பாராளுமன்றத் தொகுதியில் வாய்ப்புத் தர முயற்சிக் கிறேன்' என்று சொல்லியிருக்கிறார்.

– ஸ்ரீநிதி

# காட்சி கொடுத்த நாயனார்!

சிவாலயங்களில் வீதி உலா காணும் சோமாஸ்கந்தரை முன்பே தரிசித்தோம். ஆனால், திருவாரூர் உள்ளிட்ட ஸப்த விடங்க ஸ்தலங்களில், தியாகராஜர் என்ற பெயரோடு, மூலஸ்தானத்தில் உள்ள அந்தஸ்தை சோமாஸ்கந்தர் பெற்றிருப்பதால், வீதிவலம் வருவதற்கு என்று தமக்கென்று ஒரு பிரதிநிதியை நியமித்துவிட்டார் தியாகராஜர். பிரம்மோத்ஸவத்தின் முக்கியமான நாட்களைத் தவிர மற்ற நாட்களில், பக்தர்களுக்குக் காட்சி கொடுப்பதற்காகவே எழுந்தருளும் மூர்த்தியே, 'காட்சி கொடுத்த நாயனார்'. திருவாரூர், நாகப்பட்டினம், திருநள்ளாறு, திருக்காராயில், திருக்குவளை, வேதாரண்யம், திருவாய்மூர்... ஆகிய ஏழு ஸப்த விடங்க ஸ்தலங்களில், காட்சி கொடுத்த நாயனாரின் அழகிய செப்புத் திருமேனியைத் தரிசிக்கலாம்.

சோழர் கால செப்புப் படிமக் கலைக்கு ஓர் உன்னதமான உதாரணமாகத் திகழ்கிறார் காட்சி கொடுத்த நாயனார். ஏறத்தாழ ஓர் ஆள் உயரத்துக்கு இவர் திருவாரூரில் காட்சி தருகிறார். அம்பிகை அருகில் நிற்க, ரிஷபம் ஒன்று பின்னணியில் நின்று அழகு சேர்க்க, மிகக் கம்பீரமாக விளங்குகிறார் இந்த நாயகர். அதனால், இவருக்கு ரிஷபதேவர் என்றும் ஒரு பெயர் உண்டு.

சுந்தரமூர்த்தி நாயனாருக்குப் பேரூர் என்னும் திருத்தலத்தில் ஓர் உழவன் உருவில் காட்சி அளித்த பெருமானும் இதே கோலத்தில்தான் பின்னர் தம்மை வெளிப்படுத்தினாராம்.

சாதாரணமாக நான்கு திருக்கரங்களுடன் விளங்கும் பெருமான், இந்தக் கோலத்தில் இரண்டே திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். அந்த இரண்டு கைகளிலும் அவருக்குரிய ஆயுதங்கள் ஏதும் இல்லை. அபயகரம் வரதமுத்திரைகூட இல்லை. பெருமான் ஒரு ரிஷபத்தின் மீது சாய்ந்தவண்ணம் நின்றிருக்க, அவரது வலது திருக்கரம், அந்த ரிஷபத்தின் தலையை வருடியவாறு அமைந்திருக்கிறது. அவரது வலது முழங்கை ரிஷபத்தின் திமில் மீதோ, கழுத்தின் மீதோ படிந்திருக்க வேண்டும். இடது திருக்கரம், நெடிது (ஆஜானுபாகு!) நீண்டு இடது தொடையின் மீது படிந்திருக்கும் 'ஊரு ஹஸ்தமாக' விளங்குகிறது. அதன் விரல்

கள் மிக நேர்த்தியாக அமைந்திருக்கின் றன. இடதுகால் உறுதியாகவும் அழுத்த மாகவும் பீடத்தில் ஊன்றியிருக்க, வலது காலை அழகாக மடித்து இடதுகாலின் குறுக்கே வைத்துக்கொண்டு ஒய்யாரமாக நிற்கிறார் பெருமான். வலது திருப்பாதத் தின் விரல்கள் மட்டுமே பீடத்தில் படிந் திருக்க குதிகாலைச் சற்றே உயர்த்தியிருக் கிறார். கடுமையான உழைப்புக்குப் பின் சற்று ஓய்வெடுத்துக்கொள்ளும் நிலையில், மாட்டின் மீது சாய்ந்து நின்ற கோலம், ஓர் எளிய மனிதனையே நம் கண்முன் நிறுத்து கிறது. அதை உறுதிப்படுத்துவது போல் தலையில் சடைக்கற்றையையே




முண்டாசுபோல இழுத்துச் சுற்றியிருக் கிறார். சிக்கலான சடைமுடியின் ஊடே, ஒன்றிரண்டு பாம்புக் குட்டிகளும் நெளி கின்றனவே! இடையில் நான்கு முழத் துண்டை வரிந்துகட்டிக் கொண்டிருப்பதும், எளிமையான அணிகலன்களை அணிந்து கொண்டிருப்பதுமாகச் சேர்ந்து, ''அட! இவர் சாதாரண குடிமகனைப் போலவே (common man) காட்சி தருகிறாரே!'' என்று வியக்கிறோம்! எடுப்பான மூக்கும், கூரிய விழிகளும், முறுவல்காட்டும் திருவாயும் உள்ள அழகன் இவன். இடதுகாதில் பனை ஓலையைச் சுருட்டி அணியும் பண்டைய காலத்துத் தோடு. வலது காது, தொள்ளைக் காதாக அணிகலன் ஏதுமின்றி தொங்கு கிறது. வாட்டசாட்டமான தேக வாகு! அனாவசியமாக ஒரு கொத்து சதைகூட இல்லை. உடல் அமைப்பிலும் முகபாவத் திலும் சுறுசுறுப்பின் சாயல் தெரிகிறதே யன்றி, தளர்ச்சி சிறிதும் இல்லை! குடிப்பது கஞ்சியோ கூழோ கிடைத்தவரை கடவுள் அருள் என்று 'அவன்' மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, நிம்மதியாயும் நிறை வாயும் வாழ்க்கை நடத்தும் எளிய குடிமகனாகவே விளங்குகிறான்.

(பெருமானின் இடப்புறத்தில் அம் பிகை, இரு கரங்களு டன் 'த்ரிபங்கி' நிலை யில் காட்சி தருகிறாள்.) மணாளனுக்கு ஏற்ற மங்கை நல்லாள்! ஒரு திருக்கரத்தில் மலர் மொட்டு ஒன்றை ஏந் திய பாவனையிலும் மறுகரத்தை ஒயிலாகத் தொங்கவிட்ட நிலை யிலும் விளங்குகிறாள். சிரசில் கிரீடம் ஒன்று விளங்குகிறது. அந்தக் கிரீடம் மட்டும் இல்லா விட்டால், கணவன் மனைவியாக இரண்டு எளிய மக்கள் கிரா மத்து பஸ்ஸ்டாண்டில், பஸ்ஸுக்காகக் காத்திருப்பவர்கள் போல நமக்குத் தோன் றும். என்ன செய்ய! நம் அளவுகோல்தானே நமக்குப் புரிகிறது! ஆனால், இவர் அப்படி ஒன்றும் இலேசுப்பட்டவர் அல்ல! இங் கிலாந்தில் நடைபெற்ற 'இந்தியத் திரு விழா'வின்போது (Festival of India) இந்தியாவில் இருந்து எடுத்துச் செல்லப் பட்ட அரிய கலைப் பொக்கிஷமே இந்தக் 'காட்சி கொடுத்த நாயனார்'.

(பெருகும்)



வானமும் வையமும் வளர்ந்த
வான்புகழ் அண்ணாவின்
நூற்றாண்டு விழாவையொட்டி
பின்வரும் நான்கு நூல்களை
வெளியிட்டுள்ளோம்
இவற்றைச் சலுகை விலையில்
வாங்கிப் பயனடையுமாறு
கேட்டுக் கொள்கிறோம்.

4 நூல்களின்
மொத்த விலை ரூ. 870
சலுகை விலை ரூ. 650
மேலும் தபால் செலவை
(வி.பி.பி.) நாங்களே ஏற்கிறோம்
எனவே 650 மட்டும்
செலுத்திப் புத்தகப் பார்சலைப்
பெற்றுக் கொள்க.
இச்சலுகை 6.10.2008
வரை மட்டுமே.

| நூல்களின் விவரம் : | விலை |
|---|---|
| 1. பேரறிஞர் அண்ணாவின் வாழ்க்கை வரலாறு | ரூ. 230 |
| 2. அண்ணா போற்றிய பெருமக்கள் | ரூ. 260 |
| 3. பேரறிஞர் அண்ணாவின் தலைசிறந்த சொற்பொழிவுகள் | ரூ. 200 |
| 4. கைதி எண் 6342 | ரூ. 180 |
| நான்கு நூல்களின் மொத்த விலை ரூ. 870 | சலுகை விலை ரூ. 650 |

பள்ளி செல்லும் பாலகன் முதல் பாரகம் எங்கும் புகழ் பரப்பி மறையும் வரை
16 படங்கள், 368 பக்கங்கள் உள்ள
பேரறிஞர் **'அண்ணாவின் வாழ்க்கை வரலாறு'** நூலில்
இடம் பெற்றுள்ளன. மகிழ்ச்சி தரும் செய்தி அல்லவா இது!

முன்பணம் அனுப்ப வேண்டாம். எங்கள் செலவில் தபால் மூலம் (வி.பி.பி.) புத்தகங்களை அனுப்புகிறோம். தபால்காரர் புத்தகப் பார்சலைத் தரும்போது, சலுகை விலையை மட்டும் அவரிடம் கொடுத்து நூல்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**ஓர் முக்கிய அறிவிப்பு :** 6.10.2008க்குள் வாங்குவோர்க்கு மட்டுமே இந்தச் சலுகை உண்டு. முன்னரே பெயரைப் பதிவு செய்து, இன்னும் நூல் வாங்காதவர்க்கும் இந்தக் கால வரையறை பொருந்தும். மேலும் 6.10.2008க்குள் வாங்குவோர்க்கு மட்டுமே அடுத்தடுத்து வரவிருக்கும் அண்ணாவின் நூல்களின் விலை, சலுகை விலை பற்றிய தகவல், கடிதம் மூலம் தெரிவிக்கப்படும். (பெயர்ப் பதிவு செய்து நூல்களை வாங்கியோர்க்கு நன்றி).

---

நூல்களின் தேவைக்குக் கடிதம் மூலமோ, தொலைபேசி மூலமோ தொடர்பு கொள்க :



## தமிழ் நிலையம்

40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை – 600 017.

☎ : 2436 4174, 94452 65042, 98427 85256




'கிளினிக் போய்ட்டு இப்ப தான் வர்றேன். கன் ஃபர்ம்' என்று மனைவி சொன்னபோது மனத்தில் மகிழ்ச்சி. ஆனால், அந்தத் தருணத்திலிருந்து எனது வாழ்க்கை முறை மாறிப்போகும் என்பது தெரியவில்லை. உண்மையில் மாறித்தான் போனது.

லேட் நைட் பார்ட்டிகளுக்குப் போக முடியவில்லை. வீட்டு வேலைகளில், என் மனைவிக்கு உதவி செய்ய ஆரம்பித்தேன். கர்ப்பிணி பெண்களுக்குப் பிடிக்காது என்பதால் சிகரெட்டை விட்டேன். காரணம் வயிற்றிலிருந்த மகள்.

"என்னால் சண்டே வர முடியாது. மறுநாள் என் பொண்ணுக்குப் பரீட்சை."

"பொண்ணு மூணாங்கிளாஸ்தானே படிக்கிறாள்" என்று கிண்டலடிக்கும்

நண்பர்களிடம் சிரித்து மழுப்பினேன்.

''இன்னிக்கு என் பொண்ணு என்ன செஞ்சா தெரியுமா?'' - நான் ஆரம்பித்தாலே எல்லாரும் ஓடுவார்கள்.

இதற்கிடையில் என் மனைவி ''இங்க என்ன வேலை பார்க்கறீங்க! எங்க அண்ணன் உங்களுக்குக் கனடாவில் நல்ல சம்பளம் கிடைக்கும்னு சொல்றான்.''

''யாரு? அஞ்சு வருஷத்துக்கு ஒரு தடவை, முகத்தைக் காட்டும் உன் சித்தப்பா பையனா? அவனை முதல்ல வருஷா வருஷம் இந்தியா வர்ற மாதிரி நல்ல சம்பளத்துக்குப் போகச் சொல்லு!''

''பேச்சுக்கு ஒண்ணும் குறைச்சலில்லை. இங்க நாம வாடகை வீட்டில் இருக்கிறோம். பெண் குழந்தை வேற...''

# வேலி

''அதான் பயப்படுறேன். அந்த மாதிரி ஃப்ரீ சொஸைட்டியில் நம்ம பொண்ணு எப்படி வளர்வாளோ?''

''எல்லாம் நாம வளர்க்கிறதிலதான் இருக்குது.''

என் மனைவியின் சாமர்த்தியமோ அல்லது பிடிவாதமோ, நாங்கள் கனடாவில் வந்து செட்டிலானோம்.

வசதிகள் வந்தாலும், நான் சொன்னபடி என் மகளைப் பற்றிய கவலைகள் என்னை விட்டுப் போகவேயில்லை.

என் அன்பு மகள் வேகமாகவே வளர்ந்தாள். யுனிவர்ஸிட்டி போனாள். என் கவலைகளும் வளர்ந்தன. என்னோடு உறைந்துபோன இந்திய மனதும், மாறி வரும் சூழ்நிலைகளும் என்னைக் குழப்பின. என் மகளோ கனடாவிலிருக்கும் ஒரு பெண்ணாகவே வளர்ந்தாள். அவளுக்கு ஆண் நண்பர்கள் ஃபோன் பண்ணினால் எனக்கு எரிச்சல் வந்தது.

''வீட்டுக்கு வந்தால் டெலிஃபோனில் ஏழு மெஸேஜ் இருக்கு. அதில் ஆறு மெஸேஜ் உன் பொண்ணுக்கு. அதில் மூணு ஆம்பிளைப் பசங்க'' என்றவன் நிறுத்தாமல்

''அதென்ன மெஸேஜ். ஹாய் ஹனி, டியர் என்றெல்லாம்...'' மறுபடியும் மனைவியிடம் புலம்பினேன்.

''இங்க எவன் வேணுமின்னாலும் எவள வேணுமின்னாலும் ஹனி, டியர்-ன்னு சொல்றான்.''

''இதுக்குத்தான் நாம இந்தியாவிலேயே இருப்போம்னு சொன்னேன்.''

''இந்தியாவிலேயே எல்லாம் மாறியாச்சு. எங்க சொந்தக்காரப் பையன் மெட்ராஸ்க்குப் படிக்க வந்த ஒரு நைஜீரியா பொண்ணைக் கல்யாணம் பண்ணிருக்கான்.''

''நைஜீரியா பொண்ணுகிட்ட என்னத்தைப் பத்திப் பேசுவான்?''

''என்ன கிண்டலா...? நான் எவ்வளவு முக்கியமான விஷயம் பேசறேன்!''

''நானெல்லாம் படிக்கும்போது கூடப் படிக்கும் பொண்ணுகளிடமே பேசியது கிடையாது.''

''நீங்க பேக்கு மாதிரி இருந்தால், நம்ம பொண்ணும் அப்படியிருக்கணுமா?'' என்று என் மனைவி கேட்டாள்.

**நா**ன் பேக்கு இல்லை என்பதை என் மனைவிக்குக் காட்டவேண்டுமே! யோசிக்க ஆரம்பித்தேன். அப்போதுதான் என்னுடன் நன்றாகப் பழகி, பிறகு அமெரிக்காவுக்குப் போய்விட்ட நண்பன் சந்திரன் ஞாபகத்துக்கு வந்தான். அவனு

ச. ரெங்கநாதன்

டைய மகள் சரண்யா என் மகளுக்கு ரொம்ப க்ளோஸ் ஃப்ரெண்ட்டாக இருந்தாள். சரண்யா பெயரில் ஒரு ஈமெயில் அக்கவுன்ட் துவங்கினேன். அந்த ஈமெயில் ஐடியிலிருந்து என் மகளுக்கு ஒரு மெயிலைத் தட்டிவிட்டேன்.

*''ஹாய் அனு.*

*இது சரண்யா, ஞாபகமிருக்கா? சந்திரன் அங்கிள் - நீ முதன்முதலாக சிக்கன் சாப்பிட்ட வீடு - மாதவன் ரசிகை - அமெரிக்கா போனவள். இதற்கு மேல் அறிமுகம் தேவைப்பட்டால், நான் மெயில் அனுப்புவதில் அர்த்தமில்லை. இப்ப என்ன பண்ற? நான் இப்ப ஹூஸ்டனில் இருக்கிறேன். பிஸினஸ் படிக்க சேர்ந்திருக்கிறேன்.*

*சரண்யா.''*

---

''அவர் போலி டாக்டர்னு எப்படி சொல்ற?''

''அவர் மருத்துவமனை முன் 'இங்கு பணவீக்கத்துக்கு கட்டுபோடப்படும்'னு எழுதி வெச்சிருக்காரே.''

**- வே. சித்ரா**



என்று ஒரு ஈமெயில் என் மகளுக்கு அனுப்பினேன். என் திட்டம் பலித்தது. என் மகளிடமிருந்து உடனடியாகப் பதில் வந்தது. சரண்யாவை தன்னுடைய ஃப்ரெண்ட்ஸ் நெட்வொர்க்கில் சேர அழைப்பு விட்டிருந்தாள். சரண்யா ஐடியைப் பயன்படுத்தி என் மகளின் குரூப்போடு சேர்ந்துவிட்டேன். அவளுடைய நண்பர்கள் பற்றிய விபரங்கள் தெரிந்தன. அவர்கள் பேசும் விஷயங்கள் தெரிந்தன. பகிர்ந்துகொள்ளும் ஜோக்குகள் தெரிந்தன. இனிமேல் அவளை வேவு பார்ப்பது சுலபம்.

''இவளோட ஃப்ரெண்ட்ஸ்கள் சரியே இல்லை'' என்றேன் என் மனைவியிடம்.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நீ நினைக்கிற மாதிரி நான் பேக்கு இல்லை.'' என் வேலைகளைப் பெருமையாக விளக்கினேன்.

''உங்களுக்கு ஏங்க இந்தச் சின்னத்தனமான வேலை?''

''இது சின்னத்தனம் இல்லை. பெரியதனம். அதாவது வீட்டுல உள்ள ஒரு பெரிய மனுஷன் பொறுப்போடு இருக்கும் முயற்சி.''

''எனக்கு அப்படித் தெரியல'' என்றாள்.

''உன் பொண்ணு, 'மூச்சு முட்ட வைக்கிற திருமணங்களிலிருந்து விடுபடுவது தான் டிவோர்ஸ். அதில் ஒன்றும் தவறில்லை'ன்னு சொல்றா'' என்று மனைவியிடம் சொன்னேன்.

''அவளுக்கு இன்னும் கல்யாணமே ஆகல. அவ டிவோர்ஸ் பத்தி கருத்துச் சொன்னால் என்ன தப்பு?''

''அதில்ல. நம்ம கலாசார மேன்மையை ஓர் அப்பாவாகச் சொன்னால் அது வெறும் அட்வைஸ்-னு போரடிக்கும். அதனாலதான் சரண்யா பெயரில் சொல்றேன்!'' என்றேன்.

''என்னமோ பண்ணுங்க'' - மனைவி



''நம்ம பொண்ணுக்கு இந்த வருஷம் எப்படியும் கல்யாணத்தை முடிச்சுடணும்!''

''நல்ல பையனா அமைய வேண்டாமா?''

'' ஆமாம் போங்க. எங்கப்பா அப்படி காத்திருந்தாரா என்ன?''

- நெ. இராமன்

---

போய்விட்டாள்.

ஒருநாள் என் மகள் குரூப்பில் எனக்கு அனுமதி மறுக்கப்பட்டது. உடனே ஒரு ஈமெயில் அனுப்பினேன்.

''ஹாய் அனு

என்னாச்சு? என்னால் உன்னுடைய குரூப்பில் சேர முடியவில்லை. எதுவும் பாஸ்வேர்ட் தேவையா?

சரண்யா ''

எனக்கு உடனடியாகப் பதில் வந்தது.

''அப்பா

நீங்கதான் சரண்யா பெயரில், எனக்கு அறிவுரை வழங்கிக்கொண்டிருந்தீர்கள் என்று கண்டுபிடித்துவிட்டேன். பயமும், அவநம்பிக்கைகளும் கொண்ட உங்கள் பதிவுகளைப் பார்த்தபோதே எனக்குச் சந்தேகம் வந்தது. உண்மையிலேயே சரண்யா எனக்கு ஈமெயில் அனுப்பியபோது, முதலில் அனுப்பியது நீங்கள்தான் என்று உறுதியானது.

என்னைப் பற்றிய உங்கள் பயம் தான் உங்களை இந்தக் காரியத்தைப் பண்ணச் செய்திருக்கிறது என்று எனக்குப் புரிகிறது. கலாசாரம் பற்றிய உங்கள் கவலை எனக்குச் சிரிப்பைத் தருகிறது. கலாசாரத்தைக் கடைப்பிடிப்பதில் எல்லாரும் அவரவருக்குச் சௌகரியமான எல்லைகளை வகுத்துக்கொள்கிறோம். நீங்கள் ஊரிலிருக்கும் தாத்தாவைப் போல் பஜனை செய்வதில்லை. ஏன்... வேட்டிகூட கட்டுவதில்லை. உங்கள் எல்லைகளை நீங்கள் வகுத்துக்கொண்டீர்கள். ஆனால், அதே எல்லையை நான் மாற்றக்கூடாது என்று நம்புகிறீர்கள். அதையும் வெறும் அறிவுரைகள் மூலமே சாதித்து விடலாம் என்று நம்புவதுதான் வேடிக்கை.

நீங்கள் சொல்லும் பல அறிவுரைகள் என் நினைவில் நிற்பதில்லை. ஆனால், நீங்கள் சொன்ன ஓர் அறிவுரை என் மனத்தை விட்டுப் போகவேயில்லை. 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்பதுதான். இந்த ஈமெயில் உங்கள் கவலையைப் போக்கும் என்று நினைக்கிறேன்.''

- அன்பு மகள் அனு

**பி.கு:** சரண்யா இப்போது இருப்பது பாஸ்டனில், படிப்பது கம்ப்யூட்டர்ஸ்.

நான் என் மகளின் பதிலைப் படித்து அசந்துபோய் நின்றேன். என் மனது இலேசானது.

''என்னங்க! அனுவை வேவு பார்க்க ஆரம்பிச்சுட்டீங்களா?''

''இல்லை. இனிமேல் அதுக்கு அவசியம் இல்லை. ஆனால், ஒரு விஷயம்?''

''என்ன?''

''நான் பேக்குதான்.''

என் மனைவி சிரித்தாள். ○



# பெரிய நிதி

பலர் சேர்ந்து பண்ணுகிற பெரிய பஜனை ஒருபுறம் இருக்கட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள அனைவரும், மாலைவேளைகளில் வீட்டிலேயே ஒரு பத்து நிமிஷமாவது பகவத் நாமங்களைப் பாடி பஜனை செய்ய வேண்டும். இதில் காரிய சாத்தியமில்லாத சிரமம் எதுவும் இல்லை. குடும்பத்தினர் எல்லோரும் பூஜை அறையில் - அல்லது பூஜைக்கென்று அறை இல்லாவிட்டால், ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்து அதனமுன் உட்கார்ந்து கீர்த்தனங்களைப் பாடவேண்டும். நாமாவளிகளை கானம் செய்ய வேண்டும். அவரவர்களும் தங்களுக்குரிய நித்ய கர்மாநுஷ்டானங்களை விடாமல் செய்துவிட்டு, அதோடு பஜனையும் செய்ய வேண்டும். பகவானைப் பாடுவதற்கு வெட்கமே வேண்டாம். கருணையே உருவான கடவுளின் நாமத்தைச் சொல்வதில் வெட்கத்துக்கு இடம் ஏது? பெரிய சங்கீத ஞானம், ராக பாவம், சாரீர வசதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. பக்தி பாவனைதான் முக்கியம். ஏதேதோ விளையாட்டுக்களில் திரிந்து கொண்டிருக்கிற குழந்தை அம்மாவின் நினைப்பு வந்ததும், அவளிடம் வந்து, 'அம்மா அம்மா' என்று கத்துகிறதல்லவா? அதில் வெட்கமோ, சங்கீத அழகோ இல்லை. லோக மாதாவான பரமாத்மாவை, லௌகிக வியாபாரங்களிடையே சிறிது நேரமாவது நினைத்து, இப்படியே ராமா, கிருஷ்ணா, சிவா, அம்பா என்று கத்த வேண்டும். இந்தப் பழக்கம் ரொம்பவும் நல்லது. நம் நித்திய க்ஷேமத்தையும், ஆனந்தத்தையும் பெருக்க வல்ல பெரிய நிதி இது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# கனவின் தாழ்வாரம்

கு. இலக்கியன்



நாளை சந்திப்பதாய்
துண்டுச் சீட்டொன்று
எழுதிச் செருகிய தாழ்வாரம்
கனவில் சுழன்றபடி

எப்படியாவது அவளின்
கைகளில் அகப்பட்டுக் கொள்ள
வேண்டுமென்று
வேண்டாத தெய்வமில்லை
மனசுக்குள்

ஓட்டுப் பீடி செருகுகிற அப்பா
வெற்றிலைப்பை செருகுகிற பாட்டி
தலையிலிடித்துக் கொள்கிற
அண்ணன்

காய்ந்த பூ வீசுகிற தங்கையென

எல்லோரும்
தாழ்வாரத்தினூடே
கனவில் உலாவியபடி

எதிர்பார்த்தவாறு
எவர் கையிலும் சிக்கிவிடவில்லை
என்ற போதிலும்

அன்றைய இரவில்
பயத்தின் வாய்கள்
இதயத்தைத் தின்று துப்பியபடியே
விடிந்தது பொழுது...




# 'க்ரோம்'

சைவ சமயத்தில் சிதம்பர ரகசியம் போல, கம்ப்யூட்டர் உலகில் மைக்ரோஸாஃப்ட் - விண்டோஸ். அண்ணன் பில் கேட்ஸ் ஆணையிடுவார். தொழில்நுட்பவியலாளர்களின் ஒரு பெரும் படை ரகசியமாகச் செயல்பட்டு, விண்டோஸ் ஆபரேட்டிங் சிஸ்டம் அடிப்படையில் இயங்கும் மைக்ரோஸாஃப்ட் மென்பொருட்களின் புது வடிவங்களை உருவாக்கும். இதில் ஒன்று நம் கம்ப்யூட்டர் மூலம் இன்டர்நெட்டில் மேய வசதி செய்யும் விண்டோஸ் எக்ஸ்ஃப்ளோரர் என்ற ப்ரௌஸர்.

ஸாஃப்ட்வேரின் ஆணைத் தொடர்களை, புதையல் போல் வெளியே தெரியவிடாமல் பாதுகாக்கும் மைக்ரோஸாஃப்டுக்குச் சவால் விடுவது... லைனக்ஸ் ஆணைத்தொடர்.

லைனக்ஸ் துணைசெய்ய, மைக்ரோஸாஃப்டுக்குத் தண்ணிகாட்ட கூகிள் நிறுவனம் முதலில் களமிறக்கியது ஸர்ச் இஞ்சின் என்ற தேடு மென்பொருள். மருத்துவம் பற்றி இன்டர்நெட் தகவல் தளங்களில் என்ன எல்லாம் இருக்கிறது என்று தேட, கூகிள் சர்ச் இஞ்சினை இயக்கி, medicine என்று கம்ப்யூட்டர் கீபோர்டில் அடித்தால் போதும். தமிழில் 'மருத்துவம்' என்று தட்டச்சினாலும் கூகிள் தேடத் தொடங்கும். எளிமையும் அதிவிரைவுமான இந்தத் தேடுதல் சேவை மூலம் கூகிள் பிரபலமானது.

ஸர்ச் இஞ்சினுக்கு மேலே இன்னொரு படி போய், மைக்ரோஸாஃப்டின் இன்டர்நெட் எக்ஸ்ப்ளோரருக்குப் போட்டியாக தற்போது கூகிள் அறிமுகப்படுத்தியிருக்கும் உலவி 'க்ரோம்' (Google Chrome). செப்டெம்பர் இரண்டாம் தேதியன்று முழு ஆணைத் தொடரையும் வெளிப்படுத்தி கூகிள் வெளியிட்ட க்ரோம் சூப்பர் ஸக்சஸ். க்ரோமில் அப்படி என்ன புதுசு? நிறைய இருக்கிறதே என்கிறார்கள். உதாரணமாக...

இரா. முருகன்

கோடிக்கணக்கான இன்டர்நெட் தளங்களில் கிருமி பரப்புவதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படுகிற பயங்கரவாதிகளும் உண்டு. முக்கியமாக, உங்களுக்குத் தெரியாமல் உங்கள் கம்ப்யூட்டரில் புகுந்து உளவு பார்க்கிற ஸ்பைவேர் கிருமிகள். நீங்கள் பாட்டுக்கு ஹாயாக, இன்டர்நெட்டில் உங்கள் கிரடிட் கார்ட் எண்ணைக் கொடுத்து புத்தகமோ டிவிடியோ வாங்கிக் கொண்டிருப்பீர்கள். ஸ்பைவேர், கீபோர்ட் அசைவுகளைக் கணக்கெடுத்து, தன்னை ஏவிவிட்ட தளத்துக்கு அந்த எண்ணை அனுப்ப, அப்புறம் உங்கள் கார்ட் உங்களது இல்லை. க்ரோம் இந்தத் தொல்லையைப் போக்குகிறது. விவகாரமான எல்லா கிருமி சைட்டுகளின் விலாசங்களையும் இது தனக்குள் கொண்டிருப்பதோடு அவ்வப்போது புதுப்பித்துக் கொள்ளவும் செய்யும். நீங்கள் இதில் ஏதாவது ஒரு தளத்துக்குப் போய்ச் சேர்ந்தால், 'வேணாங்க' என உடனே எச்சரிக்கும். இந்தக் க்ரோம் 'பாடிகாட்' முனீஸ்வரன் மாதிரி எப்பவும் பக்கபலமா நம்ம கூடவே இருக்கும்.

ஒரு தடவை க்ரோம் பயன்படுத்தினால், அடுத்தமுறை இயக்



கும்போது நீங்கள் கடைசியாகப் போன ஒன்பது இணையதளங்களையும் சின்னச் சின்னப் பெட்டிகளில் திறந்து வைத்து, 'இதுதானா' என்று சிநேகமாக விசாரிக்கும் க்ரோம். ஒரே நேரத்தில் மைக்ரோஸாப்ட் எக்ஸ்ப்ளோரரில் நாலைந்து இன்டர்நெட் தளங்களுக்குப் போகலாம்தான். ஆனால், அதில் ஏதாவது ஒன்று கோளாறான சைட் என்றால், எக்ஸ்ப்ளோரர் எஸ்கேப் ஆகி இயங்காமல் மறைந்துவிடும். க்ரோம் 'மணல் பெட்டி' என்ற கோட்பாட்டைப் பயன்படுத்தி இந்தச் சிரமத்தை நீக்கு கிறது.

உங்களுக்குப் பிடித்த ஏதாவது தளத்தை, உங்கள் கம்ப்யூட்டரில் டெஸ்க் டாப் மென்பொருளாகச் சேகரித்து வைக்க லாம். அதன்மேல் மௌஸைக் 'க்ளிக்' கியதும் நேரடியாக அந்தத் தளத்துக்குக் கொண்டுபோய் விட்டுவிடும் க்ரோம். இது தவிர நீங்கள் விரும்பினால், எந்தத் தளத் துக்கு எல்லாம் போனீர்கள் என்ற தக வலைச் சேகரிக்காமல் உங்கள் இணைய உலாவைப் பரம ரகசியமாக வைக்கும் வச தியும் உண்டு. இன்டர்நெட் சைட்டில் இருந்து தகவலை உங்கள் கம்ப்யூட்டருக்கு இறக்கிச் சேமிக்க க்ரோம் எடுக்கும் நேரம், மற்ற உலவிகளைவிடக் குறைவு.

'க்ரோமை இன்னும் மேம்படுத்த வாருங்கள்' என்று உலகத்துக்கே அழைப்பு விடுக்கிறது கூகிள். பில்கேட்ஸுக்கும் விடுக்கப்பட்ட அழைப்பு இது. ○



# தஞ்சை பரத்வாஜ்

# 21.09.08 முதல் 27.09.08 வரை



**மேஷம்:** மன தைரியம் மிகுந்து காணப்படும். கல்வி வளம் மேலோங்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். வேலையில் நற்பெயர் கிட்டும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



**கடகம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. தொழில் துறையில் சுமாரான போக்கு நிலவும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போகவும். குழந்தைகள் வழியில் சுபசெலவு வந்து சேரும். ராகு / கேது/ சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



**ரிஷபம்:** வேலைப் பளு அதிகரிக்கும். மனக் குழப்பம் விலகும். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். மறைமுக விரோதிகள் இருப்பார்கள். உடல் ஆரோக்கியம் சீராகும். பணத் தேவைகள் அதிகமாகும். ராகு/ கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**சிம்மம்:** பண வருவாய் பெருகும். திருமணத் தடை விலகும். மனக் குழப்பம் தீரும். நீண்ட கால பிரச்னை முடிவுக்கு வரும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். எதிர்பாராத உதவிகள் வந்து சேரும். ராகு/ கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**மிதுனம்:** சுப காரிய நிகழ்ச்சிகள் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். கடல் கடந்த மனிதர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். பரிகாரம் தேவையில்லை.



**கன்னி:** தடை விலகித் திருமணம் நடக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் லாபம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். தூரதேசப் பிரயாணம் வந்து சேரும். சனி / குரு / வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



**துலாம்:** சுபநிகழ்ச்சி கைகூடும். வேலையில் நற்பெயர் கிட்டும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. வழக்கு வெற்றி அளிக்கும். புதிய சொத்து வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வராத நிலுவைகள் வசூலாகும். ராகு / கேது/ குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**மகரம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். உடல் நிலையில் கவனம் தேவை. நெருங்கிய கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை ஏற்படும். திருமணத் தடை ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**விருச்சிகம்:** வாக்கு வன்மை மேலோங்கும். நண்பர் / உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். திருமணக்காரியம் நிறைவேறும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு / கேது/ சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**கும்பம்:** சுபகாரிய நிகழ்ச்சி கைகூடும். மனக் குழப்பம் தீரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**தனுசு:** கடன் சுமை குறையும். திருமணக் காரியம் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். சத்ரு தொல்லை ஒழியும். கல்வி வளம் மேலோங்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நீண்டகாலம் முடிவு பெறாமல் இருந்த வழக்கு வெற்றி அளிக்கும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



**மீனம்:** மனபிரம்மை தீரும். பண வரவு பெருகும். கல்வி வளம் மேலோங்கும். வாகன யோகம் உண்டாகும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். அயல் நாட்டு மனிதரால் அனுகூலம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வேலையில் உயர்வு உண்டாகும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும். ○

# ஓர் அநுபவம்!

"தற்புகழ்ச்சி, பரநிந்தனை என்னும் இரண்டு குறைகளும் என்னிடம் அணுவளவும் கிடையாதென்பது நீர் அறிந்ததே" என்று என் நண்பர், சகோதரப் பத்திரிகாசிரியர் கூறினார்.

"என் விஷயம் தெரியும் அல்லவா? புகழ்ச்சி என்பது எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. ஒருதடவை ஒரு பத்திரிகைப் பிரியர் என்னிடம் வந்து, நான் எழுதிய ஒரு கதை நன்றாயிருக்கிறதென்று சொல்லிவிட்டார். உடனே நான் அன்றுமுதல் ஒரு வாரம் வரை உபவாசம் இருப்பதென்று உறுதிகொண்டேன். அன்றைய தினம் வீட்டில் வெங்காய சாம்பார் சமையல் என்று தெரிந்த பிறகுதான் அந்த உறுதியை மாற்றிக்கொள்ள வேண்டியதாயிருந்தது" என்று கூறினேன்.

அந்த நண்பர் சிறிது ஆத்திரத்துடன், "சரிதான்... இவ்வளவு சொல்கிறீரே, சென்ற ஒரு வருஷ காலத்தில் நான் எழுதின எக்கட்டுரையையும் பற்றி யாரிடமும் அபிப்பிராயம் கேட்டது கிடையாது. உம்மால் அப்படிச் சொல்ல முடியுமா?" என்றார்.

"பேஷாகச் சொல்ல முடியும்! ஏன் முடியாது?" என்று பதில் சொன்னேன்.

"அப்படியானால் உம் கட்டுரைகளைப் பற்றிப் பிறர் அபிப்பிராயம் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசை, உம்மனத்தில்கூடக் கிடையாதா?"

"ஆஹா, அது வேறு விஷயம். ஆனால், அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்கு நான் வாயைத் திறக்கவேண்டிய அவசியமில்லை. கேட்காமலே அபிப்பிராயம் சொல்லுகிறவர்கள் தான் நம் நாட்டில் எவ்வளவோபேர் இருக்கிறார்களே? அது இருக்கட்டும். உம்முடைய விஷயம் என்ன?"

"நல்லவேளை; எங்கே அதை மறந்துவிட்டு உம்முடைய கதையையே சொல்லிக்கொண்டு போகப் போகிறீரோவென்று பயந்தேன்" என்று கூறி நண்பர் சொல்லத் தொடங்கினார்.

"தமிழ்நாட்டில் நல்ல நாடகம் ஒன்று நடப்பது குதிரைக்கொம்பைவிட அருமை என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா? ஆகையினால்தான் கொஞ்ச காலத்துக்கு முன், சுமாராக நன்றாயிருக்கிறதென்று நான் கருதிய ஒரு நாடகத்தின்போது, எனக்குப் பின் வரிசையிலிருந்த ஓர் இளைஞனின் சேஷ்டைகள் எனக்குப் பெரிதும் ஆச்சரியத்தை அளித்தன.

நாடகம் நடந்துவருகையில் அவன் தனக்குத்தானே சொல்லிக்கொண்ட அபிப்பிராயங்கள் என் செவிகளைத் துளைத்தன. 'சீ!', 'தரித்திரம்!', 'மூதேவி!', 'சிரிப்பென்ன வேண்டியிருக்கிறது!', 'மூஞ்சியைப் பாரு!', 'பாட்டு வேறெயா; சுத்த அபஸ்வரம்!', 'தமிழ் நாடகம் ரொம்பக் கெட்டுப் போச்சு!', 'இனிமேல் வருவதேயில்லை'



என்று கூறிவந்ததைக் கேட்கக் கேட்க, 'சுமாராய் நல்லதாய் இருக்கிறது என்று நாம் நினைக்கும் இந்த நாடகத்துக்கே இவ்வளவு வசைமொழி கூறும் இந்த மகா ரஸிகன் யார்?' என்று தெரிந்துகொள்ளும் ஆவல் எனக்கு உண்டாயிற்று. அடிக்கடி அவனைத் திரும்பிப் பார்க்கலானேன். அவன் சுமார் இருபது வயதுள்ள இளைஞன். அவனுக்குப் பக்கத்திலிருந்த நாற்காலி 'ரிஸர்வ்ட்' என்ற சீட்டு ஒட்டப் பெற்றுக் காலியாயிருந்ததையும், அந்த நாற்காலியின் மீது மூக்குக்கண்ணாடிக் கூண்டு ஒன்றும், ஒரு பத்திரிகை இதழும் இருந்ததைக் கண்டேன்; அது என்ன பத்திரிகை என்று நினைக்கிறீர்கள்...

ஆமாம், சந்தேகமில்லை. எனவே, அந்த இளைஞன் ஒரு ரஸிகன் என்பதைப் பற்றி எனக்குச் சிறிதளவும் ஐயமில்லாமல் போயிற்று.

இந்தச் சமயத்தில் நாடகத்தில் திரை விட்டார்கள். நான் இளைஞனைக் கவனித்தேன். அவன் பக்கத்து நாற்காலியிலிருந்த பத்திரிகையை எடுத்துப் பக்கங்களைப்





"என் மருமகளுக்கு மூக்கு மேல கோபம் வரும்?"

"அதான் உன் மூக்குல சதா பிளாஸ்திரி ஒட்டிருக்கா!"

- அம்பை தேவா

புரட்டினான்.

அப்போது எனக்கேற்பட்ட ஆவலையும் பரபரப்பையும் சகோதரப் பத்திரிகாசிரியரான உம்மைத் தவிர வேறு யாரால் அறிய முடியும்? பத்திரிகையில் எந்தப் பகுதியை அவன் படிக்கிறான், எதை ரஸிக்கிறான், முக்கியமாக நான் எழுதியிருந்த கட்டுரைக்கு அவன் வருவான் என்றெல்லாம் எண்ணங்கள் உதித்தன.

நான் மிக ஆவலுடன் எதிர்பார்த்த நேரம் வந்தது. என்னுடைய கட்டுரையைப் படிக்கத் தொடங்கினான். தூக்கு தண்டனையை எதிர்பார்த்து, கூண்டில் நிற்கும் கைதியைப் போல், எனக்கு திக்குத்திக்கென்று அடித்துக்கொண்டது. இரண்டு வரி படித்ததும் இளைஞன் உதட்டை மடித்தான். தூக்குமரத்தைக் கண்ணால் காணத் தொடங்கினேன். ஒரு பாரா படித்துவிட்டு அவன் புஸ்தகத்தை மூடியதும் என் கழுத்தில் கயிறு இறுகி உடம்பு ஜில்லிட்டது. ஆனால், உயிர் மட்டும் போகவில்லை. ஏனெனில், அவன் என்னுடைய எழுத்துத் திறமையைப் பற்றிக் கூறிய அபிப்பிராயம் நன்றாய் என் காதில் விழுந்தது. தூக்கு தண்டனைக்கு மேல் சித்திரவதை!

ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அந்த எமகாதகன் எழுந்து போய் விட்டான். பிறகு நாடகம் முடியும் வரையில் அந்த இரண்டு ஆசனங்களும் காலியாகவே இருந்தன!"

நண்பர் பெருமூச்சு விட்டுச் சும்மா இருந்தார். "இவ்வளவுதானா கதை?" என்று கேட்டேன்.

"கதை இவ்வளவுதான்; ஆனால், அது பந்தம் பாக்கியிருக்கிறது. இரண்டு நாளைக்குப் பிறகு, நான் ஒருநாள் மாலை கடற்கரையில் அலைகள் ஓரமாக உலாவிக் கொண்டிருந்தபொழுது, அங்கே ஓரிடத்தில் அந்த இளைஞனும், அவன் அருகில் ஒரு யுவதியும் உட்கார்ந்திருக்கக் கண்டு திடுக்கிட்டேன். அவனைக் கண்டதனால் ஏற்பட்ட திடுக்கிடுதலைவிட, அவன் கையிலிருந்த ஒரு பொருள் என்னை அதிகம் திடுக்கிடச் செய்தது."

"என்ன கைத்துப்பாக்கியா?"

"இல்லை."

"கடலைப் பட்டாணியா?"

"சீ! அதுவும் இல்லை."

"சரி... நீயே சொல்லிவிடு."

"அது ஒரு புஸ்தகம்."

"சரி, தெரிந்தது."

"ஆம், அவன் கையில் நாடகக் கொட்டகையில் பார்த்த அதே பத்திரிகை இதழ்தான். இதில் எனக்கு இன்னும் ஆச்சரியம் அளித்தது என்னவென்றால் அவன் அதைப் பிரித்து வைத்திருந்த பக்கத்தில் என்னு

டைய கட்டுரையின் தலைப்பு காணப் பட்டதேயாகும். நான் அப்பக்கம் போன சமயத்தில் அவன் தன் காதலியிடம், 'ஆமாம், நாடகம் நன்றாய்த்தான் இருந்தது. ஆனால், நீ வராதபடியினால் எனக்கு ஒன் றும் ரஸிக்கவில்லை. நடுவில் எழுந்து வந்துவிட்டேன்' என்று சொல்லிக்கொண் டிருந்தான்.

'அட... பாதகா! சண்டாளா! ஓர் ஏழைப் பத்திரிகாசிரியனை மூன்று நாட்களாக இப் படி மன வேதனைக்குள்ளாக்கினாயே!' என்று அவனை மனத்துக்குள் வைதேன். அப்புறம் ஏதோ பாசத்தினால் கவரப்பட் டவன்போல் குறுக்கும் நெடுக்குமாக அந்தப் பக்கமே நாலைந்து தடவை சென்று திரும்பினேன். ஒரு தடவை அந்தப் பாவி மகன் என்னுடைய புனைபெயரைக் குறிப் பிட்டு, அருமையான ஏக வசனத்தில் அபி மானமாய்த் திட்டிப் பாராட்டிக் கொண் டிருந்தான். இது எனக்குத் திருப்தியாகவே இருந்தது. ஆனால், மற்றொரு தடவை அவன் சிறுவர் பகுதிக் கதையை வெகு ஸ்வாரஸ்யமாக அவளுக்கு வாசித்துக் காட் டிக்கொண்டிருந்தபோது, எனக்குச் சற்றுத் திகைப்புண்டாயிற்று. அதற்கு அடுத்த தடவை அவன், சற்றும் உப்புச் சப்பில் லாதது என்று நான் நினைத்த ஒரு விகடத் துணுக் கைப் படிக்க, இருவரும் இடிஇடி என்று சிரித்தார்கள். இதைக் கேட்டபோது எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. இரண்டு நாளைக்குள் ஒருவனுடைய அபிப்பிராயம் இப்படித் தலைகீழாக மாறக்கூடுமானால், அந்த அபிப்பிராயம் என்பது பக்கத்திலுள்ள வர்களையும் சமய சந்தர்ப்பங்களையும் பொறுத்தல்லவா ஏற்படுவதாகத் தோன்று கிறது? அன்றுமுதல் இன்றுவரை என்னு டைய கட்டுரைகளைப் பற்றி யாரையுமே அபிப்பிராயம் கேட்பது கிடையாது'' என்று நண்பர் கதையை முடித்தார்.

''பேஷ்! மிகவும் ரஸமான அனுபவம் தான்; மிக்க வந்தனம்'' என்று சொல்லி விட்டு எழுந்தேன்.

நண்பரும் எழுந்தார்.

''ஆனால், நான் எழுதிய 'மேதாவி பூயாஸம்' என்னும் ஹாஸ்யக் கட்டுரை யைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் தெரி விக்கவில்லையே'' என்று வினவினேன்.

''ஆமாம், ரொம்ப பேஷாயிருந்தது. என்னுடைய 'விநாயகரின் தொந்தி' என்ற கதையை நீங்கள் படித்தீர்களா?'' என்று நண்பர் கேட்டார்.

''கேட்க வேண்டுமா, என்ன! அதைப் போன்ற கதையை நான் இதுவரை படித்த தில்லை'' என்றேன்.

இருவரும் பிரிய மனமின்றிப் பிரிந்து சென்றோம்.

**(- ஆனந்தவிகடன், 02.09.1934)**



பிச்சைக்காரனைப் பாத்து எதுக்கு அந் தப் போலீஸ்காரர் பொறா மைப்படறார்?''

''ஒட்டிய வயிற்றைப் பார்த்துதான்!''

**- அம்பை தேவா**

# காதுக்குள் ராக்கெட்!

''ஃபோட்டோகிராபர் அண்ணா(?!) உங்க கஷ்டகாலம் எங்களை ஃபோட்டோ எடுக்க வந்திருக்கீங்க வாழ்த்துகள். அதுவும் இவ முகத்தை, அழகா ஃபோட்டோ எடுத்து அட்டையில போட்டுடீங்கன்னா நீங்கதான் உலகத்துலேயே பெஸ்ட் ஃபோட்டோகிராபர். ஏன்னா போன முறை ஒரு பத்திரிகையிலேர்ந்து ரெண்டு அண்ணன் (?!)கள் வந்திருந்தாங்க. இவ முகத்தைப் படம் புடிக்கும்போது, லென்ஸ் உடைஞ்சு போச்சு. அது மாதிரி இப்பவும் ஆனா பரவாயில்லையா''



'மேத்ஸ்' பவித்ராவைச் சுட்டிக்காட்டி, எடுத்த எடுப்பிலேயே நம்மீது ரகனை ராக்கெட்டை கம்ப்யூட்டர் காயத்ரி ஏவிவிட, குட் ஜாப் என்று கைகுலுக்கினர், 'ஃபிஸிக்ஸ்' பார்கவி, 'மேத்ஸ்' லோகேஷ்வரி... தாரணி, இடம் : குரோம்பேட்டை வைஷ்ணவா மகளிர் கல்லூரி மைதானம்.

''நீங்க எதுக்காவது கணக்குப் பண்ணி அது மிஸ்ஸானது உண்டா?'' 'மேத்ஸ்' தாரணியிடம் தாவினோம்.''இவ எதைக் கணக்குப் பண்ணுனாலும் அது சுணக்க மாதான் முடியும்'' என்று கோரஸ்ஸாகக் கும்மியடித்தனர் ஃபிஸிக்ஸ் பார்கவி, மேத்ஸ் லோகேஷ்வரி. ''உஷ்... சும்மா இருங்கப்பா. ஸார், சீரியஸா கேட்க றாரு, நீங்க கலாய்ச்சுக்கிட்டு'' அட்டென்ஷனுக்கு வந்தார் சீரியஸ் சிகாமணி தாரணி. ''ஒருநாள் ப்ரண்ட்ஸ் கூட சேர்ந்து படத்துக்குப் போனோம். அப்போ ஒரு குழந்தை பாப்கார்ன் பாக்கெட்டை வெச்சுக் கிட்டு, அதுவும் திங்காம மத்தவங் களுக்கும் கொடுக்காம கலாய்ச்சுக் கிட்டு இருந்துச்சு. எப்படியாவது பாப்கார்னுக்கு 'பாடை' கட்டிற ணும்னு படத்தைக் கூட பார்க்காம, பாப்கார்னயே முறைச்சுக்கிட்டு இருந் தேன். கடைசி வரைக்கும் அந்தப்



பாப்பாகிட்டேயிருந்து பாப்கார்ன வாங்க முடியல. இதைக் கவனிச்சுக்கிட்டிருந்த அவங்க அம்மா, படம் முடிஞ்சதும் பாப்கார்ன் பாக்கெட்டை என் கையில திணிச்சுட்டு முறைச்சுட்டுப் போனாங்க'' என்று தான் 'மிஸ் கணக்கி' ஆன அனுபவத்தைச் சொன்னார்.

''அப்துல்கலாம் மாதிரி ராக்கெட் விடற ஆசை இருக்கா?'' ஃபிஸிக்ஸ் பார்கவியிடம் நாம் பவ்யமானோம். ''இவ பேப்பர் ராக்கெட் விடக்கூட லாயக்கில் லைங்க, அரியர்



பேப்பரை கொரியர்லேயே எழுதி அனுப்ப முடியுமான்னு கேட்ட சோம்பேறி'' என்று தன் கணக்கைத் தீர்த்துக் கொண்டார் தாரணி. ''ராக்கெட் விடுற எண்ணமெல்லாம் இல்லை. வேணும்னா உங்கள் காதுக்குள்ள ஒரு கவிதை ராக்கெட் சொல்றேன்.

*கணக்கு ப்ரஃபஸர்*
*கணக்கத்தோடே பாடம் எடுத்தா*
*கரெக்டா நுழையும் காதுக்குள் வந்து*
*அறுவை ராக்கெட்.''*

'கொஞ்சம் சீரியஸான விஷயம் பேசலாமா?'ன்னு கேட்டோம். உடனே ஆர்வமானார்கள் லோகேஷ்வரி அண்ட் தாரணி...

''சேனல்ல நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்குறவங்களுக்கெல்லாம், கொம்பு முளைச்ச மாதிரி நெனப்பு. எப்பப் பாரு தொணதொணன்னு இங்கிலீஷ்லேயே பேசிக்கிட்டு. இவங்களுக்கெல்லாம் எலிசபெத் ராணி பிரவசம் பார்த்ததா நினைப்பு'' என்று போட்டுத் தாக்கினார் லோகேஷ்வரி. 'ஏன் தாயி அவங்க மேல இவ்ளோ கோவம்...?' அடுத்த பாலை வீசினோம்.

''அப்புறம் என்னங்க, நாம இருக்கறது தமிழ்நாடு, பேசறது தமிழ்மொழி. அப்படி இருக்கறப்ப நிகழ்ச்சி தொகுத்து வழங்கறப்ப மட்டும் எதுக்கு ஆங்கிலம்? ஆங்கிலம் தேவைதான்; இல்லைன்னு சொல்லலை. அதுக்காக ஆங்கிலம் தான் எல்லாத்துக்கும் பிரதானம்ங்கற மூடநம்பிக்கை ஒழியணும். ஜப்பான்ல எண்பது சதவிகிதம் பேருக்கு ஆங்கிலம் தெரியாது. அவங்க முன்னேறலையா? ஆங்கில மோகம் ஒழியணும்'' என்று தெர்மாமீட்டராய்க் கொதித்தார் தாரணி. வாஸ்தவம் தானய்யா...

கோபம்கொண்ட கோமகள்களிடம் ஒரு கும்பிடு போட்டு விடைபெற்றோம்.

பின்குறிப்பு : ஃபோட்டோகிராபரை 'அண்ணா' என்றழைத்ததால், அவர் அழுதழுது லென்ஸ் அவுட் ஆஃப் ஃபோகஸ் ஆயிடுச்சு. எனவே ஃபோட்டோ கலங்கலா வந்தா நீங்களே பொறுப்பு)

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

## ஜாலி ஸ்டோர்ஸ்

'தபால் இலாகாவுக்கு வருமானம் ரொம்பக் குறைந்துவிட்டது. தபால் பட்டுவாடா செய்யும் போஸ்ட்மேன்கள் மூலம், வருமானத்தைப் பெருக்கலாம்' என்று - பொதுமக்களின் போதாத காலம் மேற்படி இலாகாவுக்கு எந்தப் பொருளாதார நிபுணரோ யோசனை கூறிவிட்டார். இலாகாவின் வருமானத்தைப் பெருக்க, தபால்காரர் இனி உங்களை இப்படியெல்லாம் கூடக் கேட்கக்கூடும்.




# தபாலுக்குள் காய்கறி!

தபால்காரர் : சார், தபால்!

வீட்டுக்காரர் : தபாலா? வாசலிலே பெட்டி வைத்திருக்கிறது. போட்டுவிட்டுப் போங்களேன்.

தபால்காரர் : சாரிங்க, நாலு இடத்துக்குப் போய் விசாரிச்சாதானுங்களே நாங்கள் பிழைக்க முடியும்.

வீட்டுக்காரர் : ஏன், என்ன ஆச்சு?

தபால்காரர் : எங்களுக்கும் இப்ப ஏகப்பட்ட வேலை தந்துட்டாங்க.

வீட்டுக்காரர் : சரி, நான் குளிக்கணும். என்ன விஷயம் சொல்லுங்க.

தபால்காரர் : நீங்க என்ன சோப்பு உபயோகப்படுத்தறீங்க?

வீட்டுக்காரர் : இமாம்..

தபால்காரர் : சபாஷ்! 'இமாம் சோப்புதான் எனக்குப் பிடிச்ச சோப்பு. நான் வாழ்க்கையில் இவ்வளவு வசதியாக இருப்பதற்குக் காரணமே, இமாம் சோப்புதான்' என்று நாலு வரி எழுதிக் கொடுக்கிறீங்களா?

வீட்டுக்காரர் : சோப்புக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்?

தபால்காரர் : அப்படிச் சொல்லப்

**பாக்கியம் ராமசாமி**

படாது. உங்களை மாதிரி பத்துப் பேர் பாராட்டையும் கொண்டுபோய், அந்தச் சோப்புக் கம்பெனியிலே கொடுத்தால், கமிஷன் தருவாங்க. அந்தக் கமிஷனில் எங்கள் இலாகா ஓரளவுக்குப் பிழைத்துக் கொள்ளும்.

**வீட்டுக்காரர் :** கேட்கவே கஷ்டமாக இருக்கே?!

**தபால்காரர் :** இப்ப இருக்கிற நிலை



கோயம்பேடு மார்க்கெட்டிலிருந்து..

யில, நீங்க வேணும்னா நாலு யோசனை சொல்லுங்களேன்.

**வீட்டுக்காரர் :** நானே நினைத்தேன். இப்ப பாருங்க, காய்கறி விலைதான் பெரிய பிரச்னை. உங்களுக்கும் கடிதப் பட்டுவாடா இப்ப ரொம்பக் குறைந் திருக்கு. தபால் பைகளில் கோயம்பேடு மார்க்கெட்டிலிருந்து காய்கறி வாங்கி வந்து வீடுவீடா சப்ளை செய்யலாம். நல்ல லாபகரமாக நடக்கும்.

**தபால்காரர் :** அருமையான யோசனை. இன்னும் ஏதாவது யோசனைங்க இருக்கா?

**வீட்டுக்காரர் :** ஒரொரு வீட்லேயும் யாராவது வயசானவங்க இருப்பாங்க. தபால் பட்டுவாடாவுக்குப் போகிறவர், மேற்படி வயசானவங்களுக்குப் படுக்கை கிடுக்கை போட்டுவிடறது; அவருக்கு மருந்து தர்றது; கஞ்சி தர்றது, குளிப் பாட்டித் துடைச்சி விடறது; இவையெல்லாம் செய்யலாம். சர்வீசிங் பீஸ்னு ஒரு தொகை சம்பாரிச்சு இலாகாவின் தரித்திரத்தைப் போக்கலாம்.

**தபால்காரர் :** அய்யோ உங்க சைக்கிள் இருந்தால் கொடுங்க. இப்பவே தலைமை ஆஃபீஸுக்குப் போய் உங்க ஐடியாவையெல்லாம் சொல் லிடறேன்.

**வீட்டுக்காரர் :** அவசரப் படாதேப்பா. இந்தக் குவார்ட் டர்சில் சுமார் நூறு சைக்கிள் இருக்கும். தபால் பட்டுவாடா செய்ய வருகிறவர் அவற்றைத் தினமும் துடைத்து வைக்க லாம். ஒரு சைக்கிளுக்கு மாதம் ஐம்பது ரூபாய்ன்னு சார்ஜ் பண்ணு. தாராளமாத் தரு வாங்க.

**தபால்காரர் :** சைக்கிள் மட்டும் இல்லீங்க. ஸ்கூட்டர், கார் இதுகளைக்கூட நல்லா சுத்தம் பண்ணிடறேனுங்க. காருக்கு மாசம் இருநூறு ரூபாய், ஸ்கூட்டருக்கு நூறு போட்டுக்கலாம்.

**வீட்டுக்காரர் :** டெஸ்பாட்ச் பண்ணப் போற வீட்டிலே வேலைக்காரன், வேலைக் காரி, பாட்டியம்மா, பெரியம்மா என்று யாராவது இருப்பார்கள் இல்லையா.




போஸ்ட்மேன்களுக்கு அரசு செல விலேயே மரம் ஏறக் கத்துக் கொடுத்திட்டாங்கன்னா சரியா யிடுது.

**தபால்காரர் :** அருமையான யோசனைங்க வணக்கம். புறப்பட றேன்.

**வீட்டுக்காரர் :** கொஞ்சம் இரு. அம்மா என்னவோ சொல்றாங்க.

**தபால்காரர் :** சொல்லுங்க.

**வீட்டுக்காரர் :** அடுத்த தெரு டிபார்ட் மெண்ட் ஸ்டோர்ல வாஷிங் சோப்பு இரண்டு, கடலைப் பருப்பு ஒரு கிலோ வாங்கிக் கொடுத்துட்டுப் போகச் சொல் றாங்க.

**தபால்காரர் :** வாங்கிட்டு வர்றேங்க. ஆனா சர்வீஸ் சார்ஜ் அஞ்சு ரூபாய் ஆகுங்க!

**வீட்டுக்காரர் :** யோவ் தபால்காரரே! புழச்சுக்குவேய்யா நீ! நீ மட்டுமல்ல, உங்க இலாகாவும்! ●

அவர்களைச் சிநேகம் பிடித்துவைத்துக் கொள்ளுங்கள். அவங்க வாயைக் கிளறி னால் அந்தரங்க விஷயங்களெல்லாம் பூராவாகவோ அரைகுறையாகவோ கிடைக் கும். அதை டெவலப் செய்து அந்தத் தெருவிலே உள்ள மத்த வீடுகளுக்குச் சொல்லிவிட்டு அந்தந்த வீட்டிலிருந்து கட்டணம் வசூல் பண்ணிக்கலாம்.

**தபால்காரர் :** இப்பவே என்கிட்டே நூறு கிசுகிசு இருக்குங்க.

**வீட்டுக்காரர் :** அப்புறமா நீங்க டெலிவரி பண்ற வீடுகளிலே தென்னை மரம், மாமரம் இருந்தால் அது ஒரு உபரி வருமானம்

**தபால்காரர் :** புரியலீங்களே?

**வீட்டுக்காரர் :** மாமரம் காய்க்கிற தருணத்திலே நீங்க மரத்தைக் குத்தகைக்கு எடுத்துக்குங்க. காய் நல்லா திரண்டதும் அறுத்துப் பழுக்க வைத்து வித்தீங்கன்னா, நீங்க செலவு செய்த பணத்துக்கு மேலா நாலு மடங்கு லாபம் வரும். தென்னை மரம் இருக்கிற வீடுகளில் ஒரு மரம் ஏறுகிறதுக்கு இத்தனை ரூபாய்ன்னு சார்ஜ் பண்ணி, ஏறி காய் பறித்துத் தரலாம்.

**தபால்காரர் :** அய்யோ, எனக்கு மரம் ஏறத் தெரியாதுங்களே?

**வீட்டுக்காரர் :** அது என்ன பிரமாதம்!





# அச்சாணியில் புத்தர்

**பு**த்தர், கண்மூடி சயனநிலையில் காட்சி அளிக்கிறார். அவர்மீது மிக சுவாதீனமாக மலைப்பாம்பு ஒன்று ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறது. புத்தரின் உடலிலோ முகத்திலோ எந்த அதிர்வும் இல்லை.

''நாம் பூமியில் தனித்து இயங்குகிறோம். அதனால்தான் பகைமை உண்டாகிறது. என்னுடைய இந்த ஓவியத்தில் நான் இப்படிப்பட்ட வித்தியாசங்கள் களையப்பட்ட நிலையைக் காட்டியிருக்கிறேன். மலைப்பாம்புடன்கூட இணைந்து வாழக்கூடிய ஒரு வாழ்வு'' என்கிறார் இளஞ்செழியன்.

இவரது ஓவியப் படைப்புகளில் ஒரு பொதுவான அம்சம் தெரிந்தது. அது புத்தர். ஏன்?

''மண்வாசனை விலகாமல், நம் கலைமரபுகளைப் பிரதிபலிக்கும் வகையில் எனது படைப்புகள் இருக்கவேண்டும் என ஆரம்பத்திலேயே முடிவு செய்துகொண்டேன். இந்த நிலையில் கல்லூரிச் சுற்றுலாவின்போது அஜந்தா குகை ஓவியங்களை பார்த்துப் பிரமித்தேன். அப்போதுதான் புத்தர் என் மனத்தில் நீங்காத இடத்தைப் பிடித்துக்கொண்டார். சித்தன்னவாசல் படைப்புகளும் என்னைக் கவர்ந்தன. செஞ்சியின் அருகே உள்ள பனமலையில் இரண்டாம் ராஜசிங்கன் படைத்த கொற்றவை போன்ற கலை வெளிப்பாடுகளும் எனக்குப் பெரும் தூண்டுதலாக அமைந்தன'' என்று சொல்லும் இளஞ்செழியன், அரசு நுண்கலைக் கல்லூரியில் பட்ட மேற்படிப்பு பயில்பவர்.

* இளஞ்செழியன்



இடதுபுறத்தில் ஒருவர் தவம் செய்கிறார். வலதுபுறத்தில் பெண் தொடர்பு உட்பட பலவித போகங்களில் ஈடுபட்டிருக்கிறார் ஒருவர். இடையில் செல்லும் பாதையில் புத்தர். 'ஆன்மீகத்தின் உச்சம் ஒருபுறம், உலக மாயை ஒருபுறம் ஆகிய இரண்டுக்கும் இடைவெளியில் பிரபஞ்சத்தை நோக்கியும் பயணம் அமைவதே சிறப்பானது என்பதை உணர்த்தும் வகையில் அமைந்த ஓவியம்' என்று விளக்கம் கிடைக்கிறது.

இதற்கெல்லாம் புத்தரை மையக் களனாக்கிக் கொண்

வது அசாதாரணம்.

அனைத்துப் படைப்புக்களி லுமே இந்திய மரபுகள் பிரதிபலிக் கின்றன. ''இப்போது உலகமய மாக்குதல் என்பதே, மேற்கத்திய நாகரிகங்களை உள்வாங்கிக் கொள் வதுதான் என்று ஆக்கிக்கொண்டு விட்டோம். உண்மையில் ஆதி மனிதன் தமிழன்தான். அவனது வாரிசுகள்தான் உலகில் பரவினார் கள். ஆனால் நாம் ஆங்கிலேயர் ஆட்சியில் பலவிதங்களில் மாறி விட்டோம். நமது அடிப்படை மதிப்புகளை, கலாசாரத்தை இதில் இழந்துவிட்டதுதான் பெரும் சோகம். அதை மீட்க என்னால் ஆன சிறு முயற்சி இது'' என்கிறார்.

**- ஜி.எஸ்.எஸ்.**

**புகைப்படங்கள் :**
**ஸ்ரீஹரி**



டதற்கு வேறொரு காரணமும் உண்டாம். ''புத்தர் வாழ்ந்த காலத்தில் வேகமான போக்குவரத்து இல்லை. அவரை நேரில் சந்தித்தவர்கள் குறைவானவர்கள் தான். ஆனாலும் அவரது கொள்கைகளைப் பறைசாற்றும் ஓவியங்கள், புத்தமதம் பரவு வதற்கு மிக முக்கிய காரணிகளாக இருந் தன. அதனால்தான் கிழக்காசிய நாடுகள் அனைத்திலும் புத்தமதம் வேரூன்றியது. ஆக ஓவியமும் புத்தர் வடிவமும் நெருக்க மானவையே.''

ஓவியங்களில் மட்டும் என்றில்லாமல் பிறவிதங்களிலும் புத்தர் காட்சியளிக்கிறார். நிஜமான வண்டிச்சக்கரம் ஒன்று சுவரில் தொங்கவிடப்பட்டிருக்க, அதன் அச்சாணி யின் நுனியில் புத்தரின் தலை காணப்படு



# திக் ஃப்ரண்ட்ஸ்!

அன்று டாக்டரிடம் ரிவியூ. 'இரண்டு மாதமா வாக் போறேன், ஜிம் போறேன். கொஞ்சமாவது குறைந்திருக்கும்' என்று நினைத்துக்கொண்டாள் அருணா.

''என்ன அருணா? சொன்னதெல்லாம் ஃபாலோ பண்றியா?''

''ஆமாம் டாக்டர்''.

''காலைல இருந்து உன் ஆக்டிவிடீஸையும் உணவு முறையையும் சொல்லு!'' என்றார்.

''காலைல வெறும் வயித்தோட ஒரு மணி நேரம் வாக் போறேன்.''

''சரி.''

''வந்து காஃபி குடிப்பேன். 9 மணிக்கு பிரேக்ஃபாஸ்ட். இட்லி, தோசைனு என்ன பண்றேனோ... அது டாக்டர்'' என்றாள்.

''எத்தனை சாப்பிடுவ?''

''தோசைன்னா மூணு,




இட்லின்னா நாலு, மதியம் ஒரு மணிக்கு லன்ச். கூட்டு, பருப்பு, பொறியல் இதோட சாதம். 4 மணிக்கு காஃபி, 5 - 6 ஜிம் போயிட்டு வந்து இரண்டு சாண்ட்விச், நைட் இரண்டு சப்பாத்திதான், பால் குடிப்பேன்'' என்று முடித்தாள்.

பொறுமையாகக் கேட்டுக்கொண்ட டாக்டர், ''சரி, வா. வெயிட் செக் பண்ணலாம்'' என்றார். வெயிங் மெஷின் முன் போனமுறை காண்பித்த அதே எண்ணிலேயே, அழிச்சாட்டியம் பண்ணிக்கொண்டு நின்றது. சற்றும் நகரவில்லை.

அருணாவுக்கு ஏமாற்றமாய் இருந்தது. ஆனாலும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. ''சரி, கொஞ்சம் வெய்ட் பண்ணு. டயட்டீஷியன் வருவாரு. கன்ஸல்ட் பண்ணிட்டுப் போ'' என்றார் டாக்டர்.

காத்திருந்தாள். சற்று நேரத்தில் வந்தார், டயட்டீஷியன் மகேந்திரன். அங்கு சொன்ன அதே தகவல்களைத் திரும்பவும் சொன்னாள் அருணா. பொறுமையாகக் கேட்டவர், ''நீங்க சரியான டயட்ட ஃபாலோ பண்ணல'' என்றார்.

''இல்ல சார். எண்ணெய், ஐஸ்க்ரீம், கேக், சமோசா... இதெல்லாம் தொடறதே இல்ல. சாதம், சப்பாத்தி, டிஃபன் வகைகள்தான் எடுத்துக்கறேன்'' என்றாள் விடாப்பிடியாக.

''மேடம், நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையா கேளுங்க. நாம சாப்பிடற மாவுப் பொருட்களும் அப்படியே கொழுப்பா படிய வாய்ப்புகள் அதிகம். எண்ணெய் இல்ல... ஆவிலதான்

வெந்துருக்குன்னு சாதம், சேவை, இட்லி, கொழுக்கட்டை எல்லாம் 'நிறைய' எடுத்துக்கக்கூடாது.

ஸிம்பிளா ஒண்ணு சொல்றேன். அத மட்டும் ஃபாலோ பண்ணுங்க.... சாதத்துக்கு, காய்கறிக்கு உபயோகப்படுத்தும் சின்ன கரண்டியோ ஸ்பூனோ போதும். அன்னக்கரண்டியை, அப்படியே காய்கறிக்கு மாத்துங்க. காஃபிக்கு அரை அளவே சர்க்கரை போதும். நீங்க நாலு வேளை இட்லி, சாதம், சான்ட்விச், சப்பாத்தினு கார்போஹைட்ரேட்ஸ் நிறைய எடுத்துக்கறீங்க. கண்டிப்பா இதக் குறைக்கணும். முடிஞ்சவரைக்கும் தரையில் அமர்ந்து சாப்பிடப் பழகணும். கண்டிப்பாக வழக்கத்தைவிட இரண்டு வாய் கம்மியாதான் சாப்பிடுவீங்க.''

காய்கறி சாலட், பழ சாலட், முளை கட்டிய தானியம் என்று மாற்றி மாற்றி எடுத்துக்கொள்ளும் அட்டவணையும் கொடுத்தார். ''இதோடு கூட உங்க உடற்பயிற்சியையும் தொடருங்க. அடுத்து மூணு மாசம் கழிச்சு வந்து பாருங்க'' என்று அனுப்பினார்.

ஒருவிதக் குழப்பத்துடனேயே வீடு வந்து சேர்ந்தாள் அருணா.

உணவுக்கும் பெரிய 'நோ' சொல்ல வேண்டும்.

பொதுவாக ஐம்பது வயதுக்கு மேல், உடலும் கொழுப்பும் பிரிக்கமுடியாத நண்பர்களாகி விடுவார்களாம். அதனால், இளவயதிலேயே முயற்சியை ஆரம்பித்து விட வேண்டும். எடை குறையாவிட்டாலும் மனமொடிந்துவிடாமல், உடல் ஆரோக்கியத்துக்காக உடற்பயிற்சியையும், உணவுக் கட்டுப்பாட்டையும் தொடரவேண்டும்.

முதலில் தொப்பையில்தான் கொழுப்பு



## லக்ஷ்மி மோகன்

சிலருக்குப் பரம்பரையாகவே ரத்தக் கொழுப்பு நோய்கள் இருக்கும். இவர்கள் உடல் பருமனைக் குறைப்பதன் மூலம் கொலஸ்ட்ரால் அளவைக் குறைத்துவிடலாம் என்று எண்ணுவதுண்டு. அது சரியல்ல. ஒரு கற்று பெருக்கும்போதே மருத்துவரை உடனே அணுகவேண்டும்.

சிலருக்கு உடலில் உள்ள பிரச்னை காரணமாக, கொலஸ்ட்ராலைக் கட்டுப்படுத்தும் தன்மை மந்தமாக இருக்கும். இவர்கள் மாவுப் பொருளுக்கும் சர்க்கரை

படியத் தொடங்கும். பிறகு, சிறிது சிறிதாக இரத்தக் குழாய்களில் கொலஸ்ட்ரால் படிந்து இரத்த அழுத்தம் அதிகரிக்கிறது. சில சமயம் கொழுப்புகள் இரத்தக் குழாயில் சிறு சிறு கட்டியாகத் தேங்கி, இரத்த ஓட்டத்தைத் தடை செய்துவிடும். மூளைக்கும் இதயத்துக்கும் இரத்தத்தைச் சுமந்து செல்லும் குழாய்களில், இது போல அடைப்பு ஏற்பட்டால் விளைவு, பக்கவாதம் மற்றும் மாரடைப்பு. ○

# கவிதை

கடந்த ஜூலைத் திங்களில், அமெரிக்காவில் வாழும் தமிழர்களின் ஓர் அமைப்பாகிய தமிழ்நாடு அறக்கட்டளையின் அழைப்பை ஏற்றுச் சென்ற நான், முதல்வாரம் முழுவதும் பிட்சுபர்கில் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டேன். ஏரிகளும் அறிவாளிகளும் மிகுந்த நகரம் என்று பிட்சுபர்கை வர்ணிப்பார்கள்.

12.07.'08 அன்று அமெரிக்காவிலேயே பெரியதென்று சொல்லப்படும் அங்குள்ள மாபெரும் பல்பொருள் பேரங்காடிக்குச் சென்றபோது, புத்தகக் கடைக்குள் நுழைவதே என் முதல் விருப்பமாக இருந்தது. கவிதைப் பகுதியில் என் கண்கள் பயணம் செய்தபோது, ஜப்பானிய இறப்புக் கவிதைத் தொகுப்பு ஒன்று என் கண்ணில் தட்டுப்பட்டது. ஜப்பானியர்கள் இறப்புக்கு முன் 'உயில்' மட்டும் எழுதி வைப்பதில்லை.




தத்தம் மரணம் பற்றி இறக்கும் நேரத்தில் கவிதையும் எழுதி வைக்கின்றனர் என்பதை, அதன் முன்னுரையில் அங்கேயே படித்துத் தெரிந்துகொண்டேன். புத்ததுறவிகள், ஜப்பானிய வீரமரபினர், ஹைகூ கவிஞர்கள் எல்லோருமே இப்படிப்பட்ட இறப்புக் கவிதைகளை எழுதியுள்ளனர். எடுத்த எடுப்பில் ஒரு கவிதை.

*இளைஞனே!*
*சாவைப் பற்றிய அச்சமிருந்தால்*
*இப்போதே செத்துவிடு!*
*ஒருமுறை செத்துவிட்டால்*
*மறுபடியும் நீ சாகவே மாட்டாய்!*

ஜப்பானிய கலாசாரத்தையே ஒரு மரணக் கலாசாரம் என்று ஜப்பானியப் பேராசிரியர் ஒருவர் வரையறுக்கிறாராம். இம்மரணக் கவிதைகளிலும் வேடிக்கையான போக்குகள் இல்லாமல் இல்லை.

ஒருவர் தனது மரணக் கவிதையை எழுதி முடித்துவிட்டார். ஆனால் அவருக்கு மரணம் எதிர்பார்த்தபடி நேரவில்லை. அவருடைய மரணக் கவிதையைப் படித்துவிட்டு ஒருவர் இப்படி விமர்சித்தாராம். ''பரவாயில்லை இன்னும் உனக்கு வாழ்க்கை இருக்கிறது. சாவு தள்ளிப் போய்விட்டது; மறுபடியும் வரும். அதற்குள் இந்தக் கவிதையில் உள்ள பிழைகளையேனும் திருத்தி வை!'' சாவு தரும் சந்தர்ப்பம் இப்படியும் தான்.

கவிதைப் பிரிவில் நான் தேர்ந்தெடுத்த இன்னொரு நூல் 'கவிதைக் குடியரசு'. மார்டின் எஸ்பதா என்பவர் எழுதிய இக் கவிதை நூல், 'புலிட்சர் பரிசு'ப் போட்டியின் இறுதிச்சுற்று வரை சென்றிருக்கிறது. நூலின் அட்டையிலேயே இதை ஒரு சிறப்பாக அச்சிட்டிருக்கிறார்கள். 1957இல் பிறந்த எஸ்பா இது வரை ஏழு கவிதைத் தொகுதிகளை வெளியிட்டிருக்கிறார். இப்போது மசாசூசெட்ஸ் பல்கலைக்கழகத்தின் ஆங்கிலத்

# உயில்!




துறையில் படைப்புத்திறன் பற்றியும், பாப்லோ நெருதா படைப்புகள் பற்றியும் பாடம் நடத்துகிறார்.

'வட அமெரிக்காவின் நெருதா' என்று இவரை அமெரிக்கர்கள் போற்றுகின்றனர். இப்படி ஒப்பிட்டுப் பார்க்கவும் பாராட்டவும் - அறிவுத் தகுதியும் அகன்ற மனமும் அங்கு இருப்பதை நாம் தெரிந்து கற்றுக்கொள்ள வேண்டும். அங்கு, யாரும் - 'இப்படியேன் ஒப்பிட்டுத் தொலைக்க வேண்டும்' என்று வேதனையிலும் பொறாமையிலும் வெந்து துடிப்பதில்லை. நம் நாட்டில்தான் பாரதிதாசனை நெருதாவோடு ஒப்பிட்டுச் சொல்லிவிட்டால் உடனே, 'உலகக் கவிஞனை உள்ளூர்க் கவிஞனாகச் சுருக்கும் முயற்சி' என்று விமர்சனம் வெளிவருகிறது. குழுவாதம், குறுங்குழுவாதம் என்றெல்லாம் தம்மைத்தாமே சுருக்கிக்கொண்டவர்களுக்கு, படிப்பும் தேவையில்லை; பார்வையும் தேவையில்லை. வயிற்றெரிச்சலும் வக்கிர புத்தியுமே போதும்.

உலகத்தின் மூத்த சிந்தனையாளர்களில் ஒருவராகிய பிளாட்டோ தனது கற்பிதக் குடியரசில் கவிஞர்களுக்கோ கவிதைகளுக்கோ இடம் தரவில்லை. அறிவு மேதைமைக்குத் தகுதியற்றது கவிதை என்பது அவருடைய கருத்து. எஸ்பதாவின் கவிதைக் குடியரசில் - விமான நிலையத்தில் எத்தகைய அனுபவம் தெரியுமா?

''கவிதைக் குடியரசில்
விமான நிலையக்
காவலாளி
நீங்கள்
ஒரு கவிதை சொல்லி
'ஆகா அழகு' என்று
அந்தநாடு
அதைப்
பாராட்டாதவரை
அதைவிட்டு
வெளியேற
உங்களை
அனுமதிக்க
மாட்டான்!''



இந்நூலின் இன்னொரு முக்கியமான, முதன்மையான சிறப்பு - கடந்த 2004 ஆம் ஆண்டு பாப்லோ நெருதா நூற்றாண்டு விழாவை ஒட்டி, சிலே நாட்டுக்குச் சென்றிருந்த எஸ்பதாவினுடைய, நெருதா பற்றிய அனுபவக் கவிதை உணர்வுகளைப் பதிவுசெய்திருப்பதாகும்.

இவ்விரண்டு நூல்கள் பற்றி, பிறகு விரிவாக எழுத எண்ணியிருக்கிறேன். ●

**ஈரோடு தமிழன்பன்**

சென்னை செல்வதற்கு விமான டிக்கெட் கிடைக்கவில்லை. நான் உடனே சென்றாக வேண்டும். என் ஜெயலட்சுமியை உடனே... உடனே பார்த்தாக வேண்டும். நான் ஜெயலட்சுமிக்கு எழுதின நீண்ட கடிதத்தை அவள் அப்பா படித்து விட்டார். வேறு வழியில்லை. அவள் அப்பாதான் படித்தாக வேண்டும். இதைப் போல் நிகழும் என்று எதிர்பார்த்திருந்தால், கடிதத்தில் எழுதப்பட்ட விஷயங்களில் சிலவற்றைத் தவிர்த்திருப்பேன். எப்படித் தவிர்த்தாலும் அப்பாக்களுக்கான ஆட்சேபகரமான பகுதிகள் இல்லாமல் காதல் கடிதம் தயாரிப்பது சாத்தியமா என்று எனக்குத் தெரியவில்லை.

இந்தக் கடிதம் எழுதுவதற்குள் நான் பட்டபாடு இருக்கிறதே... அய்யய்யோ! ஆனால் சிலர் ரொம்பச் சுலபமாக எழுதிவிடுவார்கள். என் நண்பன் இசக்கிமுத்து கல்லூரியில் படிக்கும்போது இதை ஒரு உபதொழிலாகவே செய்துகொண்டு இருந்தான்.

எல்லாத் துறை மாணவர்களும் அவனிடம்தான் வருவார்கள். சைக்ளோஸ்டைல் செய்த ஒரு படிவம் வைத்திருப்பான். பெண்ணின்



# வே.எழிலரசு

பெயர், நிறம், படிக்கும் வகுப்பு, ருசிகள் - அல்லது தனித்திறமைகள் என அச்சிட்டிருக்கும் அந்தப் படிவத்தை நிரப்பிக் கொடுத்தால் போதும். உடனே வில்வ மரத்தினடியில் அமர்ந்து, கடிதம் எழுதிக் கொடுத்துவிடுவான்.

அவன் எழுதும் காதல் கடிதங்களில் அழகான மாயவலை விரித்திருப்பான். எங்கிருந்துதான் என்றில்லாமல் மேற்கோள்களை அள்ளி விடுவான். பெரும்பாலும் கண்ணதாசன்தான்.

கணேஷ் மெஸ்ஸில் சாப்பாடு, தேவி தியேட்டரில் சினிமா, கோல்ட் ஃபில்டர் பாக்கெட், 120 பான் என்று கடிதங்களுக்கு சன்மானங்கள் தந்தாக வேண்டுமென்பது வில்வ மரத்தடி இசக்கிமுத்துவின் கட்டணக் குறிப்புகள்.



டூயட் கதை-6

# பனி விழும் மலர்வனம்...

அவன் இதுவரை எழுதியிருந்த காதல் கடிதங்களை, தொகுப்பாக வெளியிட்டிருந்தால் என்னைப் போன்றவர்களுக்கு பயன்பட்டிருக்கும்.

சமீபத்தில் உருப்படியாக தமிழில் எதுவும் படிக்கவில்லையென்பதால், எழுதுவதற்கான ஊற்றுக்கண்களும் திறக்க மறுக்கின்றன. என்னுடைய டைரியைப் புரட்டிப் பார்த்தேன். அந்தியில் பேசிய இளந்தோழி/இரவுச் செடியில் மலரவிருந்த தூக்கப் பூவைப் பறித்துக் கூந்தலில் செருகிக் கொண்டு போனதை சொல்லவும் கூடுமோ அவளிடம்? யாழினி முனுசாமியின் கவிதை. எப்போதோ படித்து, எதனாலோ ஈர்க்கப்பட்டு, டைரியில் குறித்து வைத்திருந்தேன். இந்தக் கவிதையிலிருந்து கடிதத்தை ஆரம்பிக்கலாம் என்று முடிவு செய்து ஜே.கே. பாண்ட், ஒரு குயர் வாங்கிவிட்டேன்.

எழுதத் தொடங்கும்போதான மறுசிந்தனையில், எனது முடிவு பரிசீலிக்கப்பட்டது. காதல் கடிதம் என்பது ரொம்பவும் பர்சனலான உணர்வு அல்லவா? இதில் யாரோ ஒருவர், யாருக்கோ அல்லது எதற்கோ எழுதிய விஷயத்தை என் கடிதத்தில் கொண்டுவரலாமா? கூடாது. அதுவுமல்லாமல் ஜெயலட்சுமி ரொம்பவும் சூர். சட்டுன்னு கண்டுபிடிச்சு சிரிச்சிடுவா. அதைத்தான் என்னால் தாங்க முடியாது. இப்படித்தான் கல்லூரி பிரிவு பசார விழாவில் எல்லோரும் எல்லோரிடமும் கையெழுத்து வேட்டையாடியபோது, நான் மட்டும் என் ஆட்டோகிராஃப் புத்தகத்தை யாரிடமும் கொடுக்காமல் காத்

திருந்து ஜெயலட்சுமியிடம் கொடுத்தேன். அவள் அதை வாங்கிப் புரட்டிப் பார்த்தாள்.

''என்ன எல்லாப் பக்கமும் காலியாய் இருக்கு?''

''................''

''நீ யார்கிட்டேயும் ஆட்டோகிராஃப் வாங்கலியா?''

''ஆமாம். நீ கூட இதுல உன் கையெழுத்தை கடைசிப் பக்கத்தில் போட்டா போதும்.''

ஜெயலட்சுமி கடைசிப் பக்கத்தைப் புரட்டினாள். ''இதுல ஏதோ எழுதி இருக்கே..?''

''ஆமாம்... படிச்சுப் பாரு.''

படித்தாள். கொஞ்சம் தேவைக்கதிகமான சப்தத்தோடு, உரக்க வாசித்தாள்.

''நான் உனக்காகக் காலியாய் வைத்திருப்பது இந்தப் பக்கங்களை மட்டுமல்ல...''

அருகே நின்றிருந்த தோழர்களும் தோழிகளும் எங்களைக் கவனிக்க ஆரம்பித்தார்கள்.

ஜெயலட்சுமி ஆட்டோகிராஃப் புத்தகத்தை என் முகத்தில் வீசி எறிவாள்; அல்லது நாயே என்று என் முகத்தில் காறித் துப்புவாள்; அல்லது என் சட்டையைப் பிடித்து உலுக்கி என் கன்னத்தில் அறைவாள் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். நானும் அப்படியே.

ஜெயலட்சுமி மீண்டும் உரக்கப் படித்துவிட்டு, என் வாக்கியத்துக்குப் பின்னால் ஏதோ எழுதினாள். 'நான் உனக்காகக் காலியாய் வைத்திருப்பது இந்தப் பக்கங்களை மட்டுமல்ல' 'என் மூளையையும் தான்' என்று எழுதிவிட்டு என் பெயரை எழுதிவிட்டாள். எழுதிவிட்டுச் சிரித்தாள் பாருங்கள். அந்தச் சிரிப்புக்கு, பல பக்கவாத்தியங்கள் சேர்ந்து கொண்டன. என்.எஸ்.கேயின் சிரிப்போ சிரிப்பு பாடலில் கேட்க முடியாத சிரிப்புக் குறிப்புகளையெல்லாம் அன்றைக்கு அனைவரும் கேட்கநேர்ந்தது.

ஆனால் எனக்கு அன்னைக்கே தெரிஞ்சு போச்சு. ஜெயலட்சுமியும் என்னைக் காதலிக்குதுன்னு. ரெண்டாவது முயற்சி பண்ணா, அவள் மனசு இளகும்னு தோணிச்சு. ஆனால் தைரியம்தான் வரலை. காரணம் ஜெயலட்சுமியோட அப்பா, அவரை எனக்கு நல்லாத் தெரியுங்க. அவரும் எங்க மாவட்டத்துக்காரர். அதிலும் எங்க ஊர்க்காரர்தான்.

ஒருமுறை ஜெயலட்சுமியோட ரெக்கார்ட் நோட்டில் சுவாமிநாதன் 'பெர்ஃப்யூம்' தடவின மயிலிறகை வெச்சுக் கொடுத்தான். மூணு மாசம் கழிச்சு சுவாமிநாதனோட கை உடைஞ்சு செமஸ்டர் எழுத முடியாமப் போச்சு. 'சுவாமிநாதன் செஞ்ச தப்புக்கு இவ்வளவு நாள் கழிச்சு தண்டனையா?'ன்னு கேட்டதுக்கு 'அப்பா சமாதி பூஜைக்குப் போறதுக்கு விரதம் இருந்தாரு. அதனால்தான்'னு சொல்லிச் சிரிச்சா ஜெயலட்சுமி.

ஜெயலட்சுமியோட

**மைக் கார்னர்**

**காஞ்சிப் பெரியவரின் ஒழுக்கசீலத்தை வியந்து கடைபிடிக்க முயல்கிற என்னால், பெரியாரின் சமூகப்பற்றைப் போற்றிப் பிரசங்கிக்கவும் முடியும். முன்னாள் முதல்வரின் பலம், பலவீனத்தையும் இந்நாள் முதல்வரின் குறைநிறைகளையும் சுட்டிக் காட்ட முடிகிற நான், எந்த வட்டத்துக்குள்ளும் சிக்காதவன்; சுதந்திர மானவன். அதனாலேயே அரசு வழங்கும் 'கலைமாமணி'யை இன்னும் பெறாமல் இருக்கிறவன்.**

**- சுகி.சிவம் (கம்பன் விழாவில்)**

அப்பாவால எங்க பக்கத்துல நிறைய பேரு பாதிக்கப்பட்டிருக் காங்க. ஊர்ல எல்லாம் அவங்க பெரிய கட்டு வீட்டுக்குள்ளேயே எங்களை அனுமதிக்க மாட் டாங்க. ஆனால் சென்னையில் இருக்கற அவங்க வீட்டில நான் உள்ளே சாதாரணமா புழங்கு வேன். ஆனால்கூட அவர் என்னை ஏதோ ஒரு புழுவைப் பார்க்கிற மாதிரி பார்க்கறாரோ என்ற நினைப்பு மனசுல இருந் துட்டே இருந்தது.




ஜெயலட்சுமி மேல நான் வெச்சிருந்தது உண்மையான காதல்தானாங்கற கேள்வி அப் பப்ப உள்ளுக்குள்ள கேட்கும். மேல படிக்க முடியாம களத்து மேட்டிலயும், ரைஸ் மில்லிலும் வேலை பார்க்கற என்னோட பழைய கூட்டாளிங்க, ஜெய லட்சுமியோட அப்பாவைப் பழி வாங்கக் காத்துக்கிட்டிருக்காங்களே, அதே மாதிரி நானும் அவரை சில பழைய கார ணங்களுக்காக, எனக்குத் தெரிஞ்ச வழியில பழிவாங்கக் காத்துக்கிட்டிருக்கேனோன்னு கூடத் தோணிச்சு.

ஆனா அதெல்லாம் இல்லை. நான் ஜெயலட்சுமியை உண்மையாகத்தான் காத லிக்கிறேன்ங்கறது உண்மை. சர்வீஸ் கமி ஷன் பரீட்சையில பாஸ் ஆகி இங்கே மணாலியில போஸ்டிங் ஆகி தனியாக இருக்கும்போதுதான் உறைச்சது. ஆப்பிள் தோட்டங்களைப் பார்க்கும்போது, அந்த மரங்களுக்கு நடுவிலே நடக்கும்போது, 'இப்போ இதையெல்லாம் ஜெயலட்சுமி யோடு சேர்ந்து பார்த்தா எவ்வளவு நல்லா இருக்கும்'னு தோணிச்சு. பனிப்பொழிவில் நனைஞ்சு குளிரோட வந்து, ஒரு தேனீர் குடிச்சபோது, இதே போல் ஜெயலட்சுமி யும் குளிரில் நடுங்கி நிற்பது போலவும், நான் ஜெயலட்சுமிக்கு தேனீர் தயாரித்துக் கொடுப்பது போலவுமான ஒரு சித்திரத்தை மனம் புனைந்து என்னை எழுச்சியாக்கி யது. இனிய அனுபவங்களைச் சுகிப்பதற் கும், துயர அனுபவங்களுக்கு சாட்சியமாக வும் ஜெயலட்சுமி உடன் இருக்க வேண்டு மென்று மனம் தீவிரமாக அவாவுகிற தெனில் அது காதல்தானே. அதனால்தான் கடிதம் எழுதி விட்டேன். ஆகிறது ஆகட் டும் என்று எழுதிவிட்டேன். மூவாயிரம் மைல்களைத் தாண்டி எங்கள் மாவட்டத்து அரிவாள்களின் வீச்சு இருக்காது என்ற நம்பிக்கையில் எழுதிவிட்டேன்.

இன்று காலையில் என் செல்ஃபோன் ஒலித்தது. அந்தக் கரகரத்து மீசை முளைத்த குரல், ''தம்பி சௌக்கியங்களா? நான் ஜெயலட்சுமியோட அப்பா பேசறேன்'' என்றது.

''தம்பி... உங்க கடுதாசி கிடைச்சது

தம்பி உங்களுக்கு ஒரு விஷயத்தைச் சொல்லியாகணும். இந்த வருஷம் சமாதி பூசைக்குப் போயிட்டு... அப்படியே ஊர்ல கொஞ்ச நாள் தங்கிட்டு வந்தேன். ஜெயலட்சுமியும் வந்திருந்தா. ஊர்ல கலவரம் வந்து பெரிசாயிடுச்சு தம்பி. எதிரிங்க ஆஸிட் அடிச்சுட்டாங்க.'' 'எதிரிகள்' என்று பொதுவாகத்தான் சொல்கிறார். 'உங்க சாதிக்காரங்க' என்று சொல்லவில்லை என்று சந்தோஷப்பட்டேன். ''என்னைக் குறி வெச்சு நடத்துன தாக்குதல் தவறிப் போய் ஜெயலட்சுமி கண்ல பட்டுடுச்சு.''

எனக்குக் கண்களின் உள்ளே எரிவது போல் தோன்றியது.

''ஜெயாவுக்குக் கண்ணு போயிடுச்சு தம்பி... இப்ப ஜெயலட்சுமிக்கு தினமும் பேப்பர் படிச்சுக் காட்டறது, புத்தகம் படிச்சுக் காட்டறது எல்லாம் நான்தான். அதனாலதான் தம்பி, வேற வழியில்லாம உங்க கடுதாசியைப் படிக்க வேண்டியதாயிடுச்சு... என்ன... ஜெயலட்சுமிக்கு இங்கிலீஷ் கதைப் புத்தகங்கள்ன்னா உசுரு... ஆனால் எனக்கு இங்கிலீஷ் படிக்க வராது...''

''........''

''என்ன தம்பி... பதில் பேச மாட்டேங்கறீங்க...''

''அய்யா... எனக்கு இங்கிலீஷ் படிக்க வருமுங்க...'' ஜெயலட்சுமியின் அப்பா புரிந்து கொண்டார்.

நான் இப்பொழுது சென்னை சென்றாக வேண்டும். உடனே, உடனே. சென்னை சென்று, என் ஜெயலட்சுமிக்கு நான் எழுதிய கடிதத்தை நானே படித்துக் காட்ட வேண்டும். எப்படியோ லாரி பிடித்து டெல்லி வரை வந்துவிட்டேன். தீபாவளி நேரம் பாருங்கள். ரெயில்வே ஸ்டேஷனில் ஏகக்கூட்டம் அலைமோதுகிறது. உங்களில் யாராவது ரெயில்வேயில் சொல்லி எனக்கு இ.க்யூவில் ஒரு டிக்கெட் வாங்கப் பரிந்துரைக்க முடியுமா?

**தீ**பாவளியன்று, காலை நாளிதழில் சென்னை பதிப்பில் மூன்றாம் பக்கத்தில் வந்துள்ள செய்தி:

கடந்த ஆண்டு நடைபெற்ற யூ.பி.எஸ்.சி. தேர்வில் வெற்றி பெற்ற தமிழக மாணவர் மதுரையைச் சேர்ந்த முத்துமாறன் (தற்போது மணாலியில் பணிபுரிகிறவர்) சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் அடையாளம் தெரியாத நபர்களால் கொடூரமாக வெட்டிக் கொலை செய்யப்பட்டார். காவல் துறை தீவிர புலன்விசாரணையில் ஈடுபட்டுள்ளதாகக் காவல் துறை ஆணையர் தெரிவித்துள்ளார்.



''என் பையன் தங்கக் காசை முழுங்கிட்டான்...!''

''பவுன் விலை கூடும் போது எடுத்துறலாம்!''

- அம்பை தேவா

TO TEACHER

2007

(September 5, 20

Minist[illegible] Human Resou

Depa[illegible] of School Edu

New D

PRESIDENT OF INDIA

# புதிய போதிமரம்!

கடந்த பத்தாண்டுகளாக பத்தாம் வகுப்பு மற்றும் ப்ளஸ் டூ பொதுத்தேர்வுகளில் சராசரியாக 99 சதவிகிதம் தேர்ச்சி பெற்று வருகிறது, மண்ணச்சநல்லூர் அரசு பெண்கள் மேனிலைப்பள்ளி.

இதற்குக் காரணமானவர், இந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியை லலிதா தங்கராஜ். இவருடைய அயராத நற்பணியைப் பாராட்டும் விதமாக, மத்திய அரசின் 'தேசிய நல்லாசிரியை விருது' சமீபத்தில் வழங்கப்பட்டுள்ளது.

மற்ற ஆசிரியைகளை டீச்சர் என்று அழைக்கும் மாணவிகள், இவரை 'அம்மா' என்றே அழைக்கிறார்கள்.

'எப்படி இதைச் சாதிக்க முடிந்தது' என்ற கேள்வியுடன் அவரைச் சந்தித்தோம்:

''நான் பிறந்தது லால்குடி அருகே உள்ள கல்விக்குடி கிராமம். கோமாகுடி கிராமத்தில் துவக்கக் கல்வி பயின்றேன். லால்குடியில் உயர்நிலைக் கல்வி. பின்னர் கல்லூரியில் பி.எஸ்ஸி கெமிஸ்ட்ரி. அதில் மாநில அளவில் முதல் மதிப்பெண். பிறகு எம்.எஸ்ஸி. தேர்ச்சி. பிறந்ததும் வளர்ந்ததும் கிராமங்களாகவே அமைந்துவிட்டன. கிராமப்புறப் பெண்களின் கல்வியறிவு பெற்றிடாத, தாழ்வு மிகுந்த வாழ்க்கைத் தரம் என் மனத்தை அப்போதே பெரிதளவில் பாதித்தது. ஆசிரியப் பயிற்சிக்காகச் சேர்ந்த சென்னை வேப்பேரி, கிறிஸ்டோஃபர் கல்வியியல் கல்லூரி எனக்குப் போதி மரம் ஆனது.

அதன் விளைவுதான், இன்று நடப்பவை அனைத்தும். ஏழ்மையில் வாடும் மாணவிகளுக்கு நன்கொடையாளர் மூலம் உடை, கல்வி மற்றும் தேர்வுக் கட்டணம் வரை உதவுகிறோம். தேசிய நல்லாசிரியை விருதின் மூலம் கிடைத்த 25,000/- ரூபாய் பணப்பரிசை நான் பணியாற்றிய மூன்று பள்ளிகளின் நூலக வளர்ச்சிக்கே அளித்துள்ளேன். எங்கள் குடும்பத்தின் சார்பாக நிறுவியுள்ள அறக்கட்டளை மூலம் மாணவிகளுக்கு கல்வி உதவித் தொகை வழங்குகிறோம். இது, நான் பிறந்த இந்தச் சமூகத்துக்கு என்னால் செய்யமுடிந்த எளிய பணி!'' என்கிறார் லலிதா தங்கராஜ். அவரின் குரலில் எளிமையும், மென்மையும் கலந்தொலிக்கின்றன. மாணவிகள் 'அம்மா' என்று ஆராதிப்பதில் அர்த்தமிருக்கிறது.

- திருநாவு

சேரன் சாரிடம் உதவி இயக்குநராகச் சேர்ந்த நேரம். திருவல்லிக்கேணியிலிருந்து வடபழனி ஆஃபீஸுக்கு பஸ்ஸில் வருவேன். அந்த பஸ் - லிம்கா சாதனை என உலகத்தையே ஜீப்பில் சுற்றுவார்களே... அதுபோல் நிற்காமல் போய்க்கொண்டேயிருந்தது. இதைவிட செங்கல்பட்டு வழியாகப் போனால் இன்னும் சீக்கிரம் வடபழனி போய்விடலாம் என்றெல்லாம் தோன்றியது. எனவே வடபழனியிலேயே வீடு பார்த்துவிடலாம் என முடிவு செய்தேன். நண்பர் சரவணன், ''எனக்கு முருகதாஸ்னு ஒரு ஃபிரண்டு இருக்காரு. அவரு ரூம்ல மூணு பேர்தான் இருக்காங்க. கஷ்டப்படுறாங்க, வாடகையைப் பகிர்ந்துக்கிட்டா பெட்டர்! நீங்களும் வேணா தங்கிக்கோங்க'' என வடபழனி - நம்பர் 42/5, அழகர் பெருமாள் கோவில் தெருவிலுள்ள அந்த வீட்டுக்குக் கூட்டிச் சென்றார். எட்டு வீடுகள் கொண்ட காம்பௌண்டு அது.

மாடிக்குப் போக வீடு பூட்டிக் கிடந்தது. முன்பக்க ஜன்னலும் பூட்டியிருக்க, உடனே அவர் மாடிப்படி பக்கம் கூட்டிப் போய் ஒரு குறுகலான ஓட்டைக்குள் குனிந்து வரச் சொன்னார். நுழைந்து வந்தால், அது டாய்லெட் ஏரியா. மிதமாக 'கப்' அடித்தது. அங்கிருந்த இன்னொரு ஜன்னலின் ஒரு கதவைக் கஷ்டப்பட்டுத் திறந்து 'இது வழியா பாருங்க. வீடு பிடிச்சிருக்கா?' என்றார். நான் கூர்ந்து பார்க்க, எதிர்பக்கச் சுவர் எங்கே முடிகிறது எனக்கூட தெரியவில்லை. வெளிச்சம் ரொம்ப கம்மி; சுமாரான வீடுதான்.

நான் 'இங்க போய் தங்கணுமா?' என யோசித்துக் கொண்டிருந்தபோதே 'இந்தக் காம்பௌண்டைப் பத்தித் தெரியுமா?' என்றார். நான் குழப்பமாகப் பார்க்க, 'கீழதான் டைரக்டர் ஆர்.கே. செல்வமணி தங்கியிருந்தார். எதிரதான் 'சொல்லாமலே' சசி, 'லவ் டுடே' பாலசேகரன் 'தினந்தோறும்' நாகராஜன், 'செங்கோட்டை' சசிக்குமார் எல்லாம் தங்கியிருந்தாங்க என அவர் ஒரு லிஸ்ட் போட்டதும் நான் மலர்ந்து விட்டேன். வீட்டைவிட அந்த லிஸ்ட் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ஆக

# என்னை இயக்கிய ஹீரோக்கள் 9

# இயக்குநர் சிம்புதேவன்

ஆசியாவிலேயே சிறந்த வீடு இதுதான் என அங்கேயே தங்க முடிவெடுத்தேன்.

**வீ**ட்டில் நுழைந்தவுடன் சின்ன ரூம், அடுத்து சின்ன ஹால், கடைசியில் சம்பந்தமில்லாமல் ஒரு பெரிய கிச்சனும் இருந்தது. மோகன்தான் அங்கு சீனியர். டைரக்ஷன் துறையில் நல்ல அனுபவசாலி. அவர் ஷெல்ஃபில் நிறைய ஓஷோ புத்தகங்கள் இருக்கும். ஸ்கிரிப்ட் எழுதிக் கொண்டிருப்பார். எப்போதாவது மிகப் பிரமாதமாகச் சமைப்பார். அடுத்தவர் 'பாண்டி ரவி'.

முருகதாஸை (ஏ.ஆர். முருகதாஸ்) முதல் இரு வாரங்கள் பார்க்கவே இல்லை. ஊருக்குப் போயிருப்பதாகச் சொன்னார்கள்.

ஒருநாள் மாலை. அப்போதுதான் வந்திருந்தேன். கதவு தட்டப்பட்டது. போய்த் திறந்தால் சின்ன உருவமாக ஒருவர், கைலி, டி-ஷர்ட்டோடு நின்றிருந்தார். 'யாரு?' என்றேன். சற்று யோசித்தவர், 'முருகதாஸ்' என்றார். 'அவரு இல்லை... ஊருக்குப் போயிருக்கிறாராம்!' என்றேன். சற்று ஏற இறங்கப் பார்த்தவர், 'நான்தான் முருகதாஸ்!' என சொல்ல நான் பதறிப் போய் வழிவிட்டேன். 'நீங்க யாரு?' என்றார் இறுக்கமாக. 'என் பேர் சிம்பு. புதுசா குடிவந்திருக்கேன்' என்றேன்.

# சஞ்சய் ராமசாமியும்... 23ம் புலிகேசியும்..!

பாண்டிச்சேரியில் இருந்து வந்து, மாதத்தில் ஒரு வாரம் தங்குவார். அடிப்படையில் கேமராமேன். ஆனால், நடிப்புதான் இலக்கு. சின்னச் சின்ன கேரக்டர்களில் பல படங்களில் நடித்துள்ளார். (இப்போது செம்பி என்ற பெயரில் ஆலயம் என்ற படத்தில் ஹீரோவாக நடித்துக்கொண்டிருக்கிறார்.)

அதற்கு முன் அந்த வீட்டில்தான் கேமிராமேன் ரவிவர்மன் இருந்திருக்கிறார். அவர் காலி செய்தபின் அந்த இடத்துக்குத்தான் நான் வந்துள்ளேன் என்ற தகவலும் தெரிந்தது. நான் அங்கு குடியேறியபோது வெளி ரூமில்தான் எனக்கு இடம் கிடைத்தது. மூன்றாவது நபரான

யாருமே சொல்லலையே' என யோசித்தவர் உள்ளே போய்விட்டார். அன்று நாங்கள் பேசிக்கொள்ளவே இல்லை.

ஆனால், அதன் பின் அந்த வீட்டில் மிக அதிகமாகப் பேசிக்கொண்டது நாங்கள் இருவரும்தான். நான் கார்ட்டூனிஸ்ட் என்பதில் அவருக்கு மிகுந்த சந்தோஷம். அப்போது 'பூச்சூடவா' இயக்குநர் உதயகுமாரின் தெலுங்குப் படத்தில் ஒர்க் பண்ணிக்கொண்டிருந்தார். அடிக்கடி டீ குடிக்கப் போவோம். ஆரோக்கியமான நட்பு உருவானது.

ரூமில் ஒரு பாடாவதி கருப்பு வெள்ளை டீ.வி. இருந்தது. கொக்கி போட்டு, ப்ளேடு போட்டு கேபிள் கனெக்



* மோகன், சிம்புதேவன், ஏ.ஆர்.முருகதாஸ்...

'சரி' என்றேன். பரண் மேல் இருந்த பெட்டியை இறக்கித் திறந்து, ரகசியமாக ஏதோ கஞ்சா அபினை வைத்திருப்பது போல் ஒரு புத்தகத்தை எடுத்துத் தந்தார். அது முருகதாஸ் எழுதி, 'கண்மணி'யில் பிரசுரமான குடும்ப நாவல். எனக்கு ஆச்சர்யமும், சந்தோஷமும்! 'இதை ஸைலண்டாப் படிச்சுட்டு என்கிட்டேயே குடுத்துருங்க! யார்கிட்டேயும் காட்டிற வேண்டாம்' என்றார். 'ஏன்?' என்றேன் குழப்பமாய். 'எழுதற ஆள் சினிமாவுக்கு ஒர்க் அவுட் ஆகமாட்டாங்கன்னு ஒரு நம்பிக்கை உண்டு. நமக்கேன் வம்பு!' என்றதும் நானும் மிரண்டு போனேன். இது தெரியாமல் இவ்வளவு நாள் நானும் வெளியே பத்திரிகையாளன் என்றல்லவா பீற்றிக் கொண்டிருந்தேன். 'பட்... பத்திரிகைகாரன்னா பிரச்னை இல்லைல?' எனக் கேட்டேன். 'எல்லாம் ஒரே குட்டைதான்!' என்றார். பயத்தில் அதன்பின் நானும் முடிந்த அளவு யாரிடமும் பத்திரிகையாளன் என மூச்சே விடுவதில்லை.

அது இயல்பான நாவல். 'எழுதறதுல வேணும்னா வசனத்துலயே சமாளிக்கலாம். ஆனா சினிமாவுக்குத் திரைக்கதை தான் ஜீவநாடி! படம் எந்தவிதமான ஸ்டைலில், இருந்தாலும்.. திரைக்கதை தர்மம் தான் காப்பாத்தும்!' என்பார். முருகதாஸ் படங்களின் கம்பீரமே திரைக்கதைதான்! அப்போதெல்லாம் அதிகாலையில் 'யேய் முருகதாஸ்... எந்திரிச்சு வாப்பா!' என்ற கூக்குரல் கேட்டு பதறியடித்து நான் கண் விழிப்பேன். வாசலில் சிம்மக் குரலோன்

ஷன் எடுத்திருப்போம். பாதி பார்த்துக் கொண்டிருக்கும்போது படம் சப்பையாகி மழை பெய்யும். சமயத்தில் ரெண்டு சேனல் சேர்ந்து தெரியும். அல்லது ரெண்டாவது சேனலின் சவுண்டு மட்டும் கேட்கும். பால்கனி ஓரம் யாராவது வந்து நின்றால் படம் தெரியாது. போய் ஆளை அப்புறப்படுத்தியதும் மறுபடி தெரியும். இப்படி ஒரு டீ.வி.யில்தான் மூவிஸ் சேனலில் ஏகப்பட்ட படங்களைச் சேர்ந்து பார்த்து... ''என்னா மாதிரி ஷாட் வைக்கிறான் பாரு!'' என்றெல்லாம் வியப்போம். அரைகுறையாகத் தெரியும் படங்களைப் பார்த்து ஏகமாய் விவாதிப்போம். மோகன், அதிகம் பேச மாட்டார். பேசினால் ஆராய்ந்து பேசுவார். எப்போதாவது வரும் ரவிவர்மன் எந்தப் படத்தைப் பற்றிச் சொன்னாலும், அதன் டிவிடி தன்னிடம் இருப்பதாகச் சொல்வார்.

**எ**ழுத்து முருகதாஸின் பலம். ஒருமுறை கதவைச் சாத்திவிட்டு வந்து, 'நான் ஒண்ணு காமிப்பேன். யார்கிட்டேயும் சொல்லக்கூடாது' என்றார். தயக்கமாக

இயக்குநர் எஸ்.ஜே.சூர்யா நின்று கொண்டிருப்பார். முருகதாஸை கைலி டி-ஷர்ட்டோடு 'குஷி' பட டிஸ்கஷனுக்கு கூட்டிப் போய் விடுவார். எஸ்.ஜே. சூர்யாவுக்கும் திரைக்கதைதான் பலம். ஆரம்பத்தில் முருகதாஸ் குரங்கை வைத்து ஸ்பீல்பெர்க் ரேஞ்சுக்கு ஒரு கதை வைத்திருந்தார். அதற்கு நான் படம் எல்லாம் வரைந்திருக்கிறேன். அந்தப் படத்தை எடுத்திருந்தால், தமிழ் சினிமா உலகில் அவர் பாதை வித்தியாசமான கோணத்தில் போயிருக்கும். புரொட்யூசர் ஓ.கே. செய்த பின்பும், ஏனோ முடியாமல் போய்விட்டது.

பின் முருகதாஸ், 'தீனா' படம் தொடங்கியபோது நான் சேரன் சாரிடம் இருந்தாலும், அறை நண்பனாக என்னாலான பங்களிப்பைச் செய்தேன். கஷ்டமான சில ஸீன்களுக்கு ஸ்டோரி போர்டு வரைந்தேன். அது எனக்கும் நல்ல அனுபவம். டப்பிங், மிக்ஸிங்கில் அடிக்கடி இருப்பேன். படம் ரிலீஸானபோது முதல் ஐம்பது நாட்களுக்கு, நான்தான் விளம்பரப் பகுதிகளைப் பார்த்துக்கொண்டேன். 'மூன்று செண்டருக்கும் முழுமை தருகிறது... நான்கு காட்சிகளும் நிரம்பி வழிகிறது' என்பது போன்ற உலக மகா கேப்ஷன்கள் கொடுப்பேன். பின்னர் ரமணா, ஸ்டாலின், கஜினி, ஹிந்தி கஜினி என உயரமாக போய்க் கொண்டிருப்பவர் ஏ.ஆர்.முருகதாஸ். உழைப்பு, ஈடுபாடு மட்டுமல்ல... நிதானமாக அடி எடுத்து வைப்பதும் அவரிடம் இருந்து கற்றுக்கொள்ள வேண்டிய விஷயம். ரமணா முடிந்து சில கஷ்டங்களை முருகதாஸ் எதிர்கொண்டார். 'சினிமாவில் நாம நல்லா இருக்கும்போதும், இறங்கு முகம் வந்தால் எப்படி சமாளிக்கிறதுன்னு தயாரா இருந்தாலே போதும். நமக்கு எப்பவுமே ஏறுமுகம்தான்!' என்பார். நண்பர் முருகதாஸிடம் இருந்து நிறைய கற்றுக்கொண்டேன்.

அந்த வீட்டில் ரெண்டு வருடம் இருந்தோம். அவருடன் பணியாற்றிய, அடிக்கடி அறைக்கு வரும் நண்பர் சம்பத்குமார் இப்போது புரொட்யூசர் ஆகிவிட்டார். எதிர் காம்பௌண்டில் இருந்த நண்பர் மூர்த்தி 'கருப்பசாமி குத்தகைக்காரர்' வெற்றிப் படம் கொடுத்தார். 'இம்சை அரசன் 23-ம் புலிகேசி'யைப் பார்த்துவிட்டு முருகதாஸ்



பாராட்டியது ரொம்பவே சந்தோஷமாக இருந்தது. என்ன செய்கிறோம் என்பதை விட, எங்கேயோ சிக்கி எல்லோரும் பிஸியாக இருக்கிறோம். இப்போது முக்கால்வாசி நாட்கள் முருகதாஸ் மும்பையில்தான் இருக்கிறார். ஃபோனில் தான் பெரும்பாலும் நாங்கள் பேசிக்கொள்கிறோம். என்றாலும் ஆரம்பித்து வைத்த அழகர்பெருமாள் கோவில் தெருவின் நாட்கள் அழகானவை. எங்கள் நட்பின் உண்மை இதமானது.

**(பேசுவேன்)**

# எந்திரம்

கிருஷ்ணா

**கா**லையில் கண்விழித்ததுமே, ஏதோ வித்தியாசத்தை உணர்ந்தாள் வித்யா.

காஃபி வாசனையோ, சாம்பார் வாசனையோ வரவில்லை, அடுப்படியிலிருந்து. மெல்லிய குரலில் ஸ்லோகங்களைப் பாடும், மாமியின் குரலும் கேட்கவில்லை.

படுக்கையிலிருந்து எழுந்து, அறையைவிட்டு வெளியே வந்ததுமே, அடுப்படி தெரிந்தது.

மாமி தரையில் விழுந்து கிடப்பதைக் கண்டதும் பதறிப் போனாள். ஓடிச்சென்று மாமியைத் தூக்க முயன்றாள். முடியவில்லை. மாமிக்குச் சற்று கனத்த சரீரம்.

''கண்ணா, சீக்கிரம் வாங்க'' என்று தன் கணவனை அழைத்தாள்.

அவள் குரலிலிருந்த பயமும், அவசரமும் உறைக்க, ஓடி வந்தான் கண்ணன்.

''மாமி மயக்கமாகிக் கிடக்காங்க'' என்றாள் வித்யா.

கண்ணன், குளிர்சாதனப் பெட்டியிலிருந்து தண்ணீர் பாட்டிலை எடுத்து, மாமி முகத்தில் 'சில்'லென அடித்தான்.

மாமி மெல்ல முனகினாள். குடிக்க நீர் கொடுத்தான் கொஞ்சமாய். மாமி மெதுவாய்க் கண் திறந்தாள். எழுந்து அமர முயன்றாள்.

''திடீர்னு கண்ணை இருட்டிட்டு வந்தது'' என்றாள், குற்றஉணர்வுடன்.

''பரவாயில்லை மாமி. சூடாய்க் குடிக்கக் கொண்டுவரவா?''

அரை தம்ளர் காஃபி குடித்ததும், மாமிக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

''என்னாச்சு மாமி?''

''கொஞ்ச நாளாகவே அடிக்கடி கண்ணை இருட்டிட்டு வர மாதிரியிருக்கு. சமாளிச்சுடுவேன். ஆனால், இன்னிக்கு விழுந்துட்டேன் போலிருக்கு''

மாமி சொல்வதைக் கேட்டதும், வித்யாவும், கண்ணனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

இருவருமே கம்ப்யூட்டர் இன்ஜினீயர்கள். காலையில் எட்டரை மணிக்குக் கிளம்பினால், இரவு வீடு வந்து சேர ஒன்பது, பத்துமணி கூட ஆகிவிடும்.

சமையல் வேலைக்கு வீட்டுடன் இருக்கும்படி ஆள் தேடும் போதுதான், அந்த ஏஜென்ஸி பற்றித் தெரியவந்தது.

'சேவை மையம்' என்ற பெயரில் பெண்களை வீட்டு வேலைகளுக்கு அனுப்பும் ஏஜென்ஸி அது. மாதம் ஐயாயிரம் ரூபாய் அவர்களுக்குத் தந்துவிட வேண்டும். அதில் மூவாயிரம் ரூபாயை அவர்கள் ஏற்பாடு செய்துதரும் பெண்களுக்கு ஏஜென்ஸியே தந்துவிடும். மாதம் ஒருமுறை அந்தப் பெண்களை அழைத்துப் பேசுவார்கள். வேலை செய்யும் இடத்தில் நன்றாக வைத்துக்கொள்கிறார்களா என்று கேட்டு, உறுதி செய்துகொள்வார்கள். அதேபோல வேலைக்கு அமர்த்திக்கொள்பவர்களுக்கு, அனுப்பிய பெண்மணி பிடிக்கவில்லை என்றாலும், வேறு பெண்மணியை அனுப்புவார்கள். இருபது வயதிலிருந்து,



அறுபது வயது வரை உள்ள பெண்மணிகள் அங்கு உள்ளனர்.

வித்யாவும், கண்ணனும் அந்த ஏஜென்ஸி அலுவலகத்துக்குச் சென்றபோது தான் மாமியைக் கண்டார்கள். மாமியும் அன்றுதான் வேலை கேட்டு அங்கு வந்திருப்பது தெரிந்தது.

பார்த்தவுடனேயே பிடித்துவிட, பொறுப்பான ஆள் கிடைத்துவிட்ட நிம்மதியில், வீட்டைப் பற்றிய கவலையின்றி இருந்துவந்தனர் இருவரும்.

கிட்டத்தட்ட ஒரு வருடமாய் எந்தப் பிரச்னையுமின்றி ஓடிய நேரத்தில், இப்போது புது சிக்கல்.

ஏஜென்ஸிக்குத் தகவல் தெரிவித்தனர். அவர்கள் 'கால் டாக்ஸியை' அனுப்பி, மாமியைக் கூட்டிச் சென்றுவிட்டனர்.

''ஆஃபீஸ் போற வழியிலே டிஃபன் சாப்பிட்டுக்கலாம். பத்து மணிக்கு மீட்டிங் இருக்கு, கமான்.''

வித்யாவும், கண்ணனும் வழக்கமான பரபரப்பு வாழ்க்கையில் அமிழ்ந்து போயினர்.

மதியம் மூன்று மணிக்கு, வித்யா தொலைபேசியில் கண்ணனை அழைத்தாள்.

''நாம செஞ்சது சரியில்லையோன்னு தோணுது, கண்ணன்.''

''மாமி மேட்டர்தானே'' என்றான் கண்ணனும்.

அடுத்த அரைமணியில் இருவரும்

## மனம் கவர் கள்வன்

திருமணத்துக்குப் பிறகு நடிக்கும் படங்கள், தனக்கு ப்ரேக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நடிகர் ஸ்ரீகாந்த் ஒப்புக் கொண்ட படம் 'எட்டப்பன்', டைட்டிலுக்குப் பிரச்னை ஏற்படவே அதை இப்போது 'ரசிக்கும் சீமானே' என்று மாற்றியிருக்கின்றார் இயக்குநர் வித்யாதரன்.

"கடவுள், வாழ்க்கை என்னும் சதுரங்க விளையாட்டில் மனிதனுக்கு வைத்த செக் மரணம். அந்த மரணத்துக்கும் பயப்படதாவர்கள் காதலர்கள்தான் என்பதே படத்தின் அடிநாதம். காதல் கலந்த த்ரில்லர் படமான இதில், நாயகன் ஸ்ரீகாந்த் முதன்முறையாக நெகட்டிவ் ரோலில் நடித்திருக்கிறார். மற்றவர்களின் பலவீனங்களைத் தனது பலமாக மாற்றிக்கொண்டு லாபம் பார்க்கும் மனிதராக வருகிறார் ஸ்ரீகாந்த். இந்தநிலையில் கதாநாயகியின் அழகில் மயங்குகிறார். அவரது காதலையும் ப்ளாக்மெயில் மூலமாக அடைய நினைக்கும்போது ஏற்படும் 'திடுக் திடுக்' திருப்பங்கள்தான், படத்தைச் சுவாரஸ்யப் படுத்தும். படத்தின் மிகப் பெரிய ப்ளஸ் மியூஸிக் டைரக்டர் 'நாக்கு மூக்கு' புகழ் விஜய் ஆண்டனி. அவரது இசையில் பாடல்கள் பிரமாதமாக வந்திருக்கின்றன" என்கிறார் இயக்குநர் வித்யாதரன். இவர் இந்தப் படத்தில் ஒரு முக்கியமான கேரக்டரிலும் நடிக்கிறார். அப்ப தமிழ் சினிமாவுக்கு இன்னொரு ஹீரோ ரெடி!

**- கண்மணி**

ஏஜென்ஸி அலுவலகத்தில் இருந்தனர்.

"ஓ, அவங்களா...? டாக்டரிடம் கூட்டிட்டுப் போனோம். மூளையிலே ஏதாவது கட்டி இருக்கலாம்னு டாக்டர் சந்தேகப்படறார்'' என்றார் ஏஜென்ஸி மானேஜர்.

"கடவுளே'' என்றாள் வித்யா.

"காய்ச்சல், தலைவலின்னா நாங்களே மருந்து, மாத்திரைக்குச் செலவழிப்போம். ஆனால், இதுகொஞ்சம்... செலவு தாங்காது எங்களுக்கு. அவங்களைக் கேட்டோம். பையன் வீட்டுக்குப் போறேன்னு சொன்னாங்க. ஆட்டோ பிடிச்சு அனுப்பிச்சுட்டோம். உங்களுக்கு வேறு ஆளை நாளைக்குள்ளே ஏற்பாடு செஞ்சு தர்றோம்'' என்றார் மானேஜர்.

வித்யாவுக்குச் சுருக்கென்றது.

"மாமி இப்ப இருக்கற விலாசம் தெரியுமா?''

மானேஜர் சிறிய காகிதத்தில் எழுதிக் கொடுத்தார்.

கண்ணன் காரை ஓட்ட, வித்யா மௌனமாய் அமர்ந்திருந்தாள்.

"என்ன வித்யா?''

"அந்த மானேஜர் பேசியவிதம் எனக்குப் பிடிக்கலே. யோசிச்சுப் பார்த்தால், என்னையே எனக்குப் பிடிக்கலே.''

கண்ணனுக்கும் அவள் அலைவரிசை புரிந்தது.

''ப்ச், கிட்டத்தட்ட ஒரு வருடம் நம்ம கூட மாமி இருந்திருக்காங்க. அவங்க எந்த ஊர், குடும்பம் எங்கே இருக்கு, எப்படி வாழ்ந்தாங்கன்னு நாம இதுவரைக்கும் அவங்களிடம் கேட்டதே இல்லையே. அவங்களை மனுஷியாய் மதிக்கவே இல்லையே...'' என்று புலம்பினாள் வித்யா.

''ரோபோக்களுக்கு மனிதர்களைப் புரிஞ்சுக்கமுடியாது, வித்யா'' என்றான் கண்ணன் மெதுவாய்.

அவன் ரோபோக்கள் என்றது தங்கள் இருவரையும்தான் என்று புரிய, வித்யா சோகையாய்ச் சிரித்தாள்.

''போன மாசம், காலையிலே மாமி எனக்கு பாயசம் செஞ்சு கொடுத்தாங்க. அன்னைக்கு என் பிறந்தநாள்னு தெரிஞ்சிண்டாங்களாம். ஊரிலிருக்கற என் அப்பா, அம்மா கூட மறந்துட்டாங்க என் பிறந்த நாளை. மாமி தெரிஞ்சுக்கிட்டு, பாயசம் வேற பண்ணி, என்னை ஆச்சர்யப்படுத்திட்டாங்க'' என்றான் கண்ணன்.

''உண்மைதான். சின்னச் சின்ன விஷயங்களில்கூட மாமி நம்மோட ஒன்றி, நம்ம வாழ்க்கையிலே, ஊடுருவிட்டாங்க. நாமதான்... ப்ச், இயந்திரம்... இயந்திரம்'' என்று அவன் தலையில் தட்டினாள் வித்யா.

வழி விசாரித்து, மாமியின் வீட்டைக் கண்டுபிடித்துவிட்டனர் இருவரும்.

ஸ்டோர் குடியிருப்பில், சிறிய போர்ஷனில் வெளிவாசலில் ஒடுங்கிப்படுத்திருந்தாள் மாமி.

இவர்களைக் கண்டதும், முகத்தில் மலர்ச்சி.

''எல்லாம் சரியாயிடும். செல்லாயி அம்மனுக்கு முடிஞ்சு வைச்சிருக்கேன். இரண்டு நாள் கழிச்சு வந்துடறேன். எல்லாம் பேரன், பேத்தி பாசத்தினாலே இங்கே வந்துட்டேன்'' என்றாள்.

உள்ளேயிருந்து மாமியின் ஜாடையில் அவள் மகன் வந்தான். நாற்பது வயதிருக்கும்.

''கட்டி, கிட்டின்னு சும்மா பயமுறுத்துவாங்க... டாக்டருங்களே இப்படித்தான். கொள்ளைக்காரங்க'' என்றான், மாமியின் மகனும், தன் பங்குக்கு.

வித்யாவுக்கு அவர்களின் வறுமை புரிந்தது.

''மாமியை நாங்க டாக்டரிடம் கூட்டிட்டுப் போகலாம்னு வந்திருக்கோம்'' என்றாள்.

''அதெல்லாம் எதுக்கு...?'' என்று ஆரம்பித்த மாமியின் மகனைத் தடுத்தான்.

''எல்லாச் செலவும் எங்களோடது''

''அது... செலவுக்குச் சொல்லலே. சரி, நீங்க படிச்சவங்க. என்னம்மா சொல்ற?'' என்றான்.

மாமியை அழைத்துக்கொண்டு, அவர்கள் கார் புறப்பட்டது. ●

# ஜிம்முக்குச் செல்லாதீர்கள்

''வர்மம் என்பது தற்காப்புக் கலை மட்டுமல்ல. அதைப் பயன் படுத்தி நரம்பு சம்பந்தமான நோய் களுக்கும் சிகிச்சை அளிக்க முடியும்'' என்கிறார் பிரபல வர்மக் கலை நிபுண ரான டாக்டர் சுப்புலட்சுமி.

''வர்மம் இரண்டு வகைப்படும். ஒன்று, வர்மக் கலை. அதாவது, தற்காப்புக் கலை; மற்றொன்று வர்ம சிகிச்சை.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை எப் போதுமே ஒரே மாதிரியான சிகிச்சை முறை களை மேற்கொண்ட மக்கள், சட்டென ஒரு மாற்றுச் சிகிச்சை முறைக்கு வர ரொம்பவே தயங்குகிறார்கள். சிங்கப்பூர் போன்ற பொருளா தாரத்தில் வளர்ந்த நாடுகளில்கூட தமிழர்களைவிட சீன மக்கள்தான் அதிகள வில் இந்தச் சிகிச்சை முறையை மேற்கொள் கின்றனர்'' என்றவரிடம், வர்மசிகிச்சை எல்லா நோய் களையும் குணப்படுத்துமா? என்று கேட்டால்,

''எல்லா நோய்களுக்கும் தீர்வு என்பது எந்தச் சிகிச்சையாலுமே தர முடியாதது. வர்மக் கலை சிகிச்சையின் மூலம், நரம்பு, தசைகள் சம்பந்தப்பட்ட நோய்களைப் பூரணமாகக் குணப்படுத்த முடியும். குறிப் பாக மூளை வளர்ச்சி குன்றிய குழந்தை களை, வர்ம சிகிச்சையின் மூலம் முன்னேற்றம் காணச் செய்ய முடியும். ஆனால், பல பெற்றோர்களுக்கு இதைப் பற்றிச் சரியாகத் தெரிவதில்லை. 'செரிபிரல் பால்ஸி' போன்ற நோயால் தாக்கப்பட்ட குழந்தைகளை நரம்பு சம்பந்தப்பட்ட சாதா ரண சிகிச்சையில் ஈடுபடுத் தும்போது, மூளையின் வளர்ச்சி தடைப்படும் ஆபத்தும் இருக் கிறது. அதைப் போலவே spastic diplegic என்ற கோளாறால் பாதிக்கப்பட்ட குழந்தை களுக்கு, இரண்டு கால்கள் மட்டுமே பாதிக் கப்பட்டிருக்கும். ஐ.க்யூ. லெவல் என்பது அதிகம். ஆனால், இவர்களின் பெற் றோர்கள், இவர்களை ஸ்பெஷல் பள்ளி களில் அனுமதித்து விடுகின்றனர். அங்கே இவர்களைவிட ஐ.க்யூ. லெவல் குறைவாக உள்ள குழந்தைகளோடு இவர்கள் சேர்ந்து படிக்க, பழக நேர்வதால், இவர்களது ஐ.க்யூ. லெவலும் குறையக்கூடிய அபாயம் இருக்கிறது. பலவிதமான ஸ்பாண்டிலைடிஸ் பிரச்னை களுக்கு அறுவைச் சிகிச்சை எதுவும் இல்லாமல் வர்ம சிகிச்சை மூலம் தீர்வுகாண முடியும்'' என்றவர், இடுப்பு வலி, முதுகுவலி, தசைப் பிடிப்பு பிரச்னைகள்

* டாக்டர் சுப்புலட்சுமி





குறித்தும் பேசினார்.

''பொதுவாகவே பெண்கள் தங்களது தசைகளுக்குச் சரியானபடி வேலை கொடுப்பதில்லை. உதாரணமாக குதிகால் வலி. சோதித்துப் பார்த்தால் அவர்களது கணுக்கால் தசைகள் ரொம்பவே இறுக்கமாக இருக்கும். இதற்குக் காரணம் நம் வாழ்க்கை முறைதான். கணுக்கால் தசை களுக்கு 'இரண்டாவது இதயம்' என்ற ஒரு பெயரும் உண்டு. அந்தத் தசைகளை நாம் ஓடும்போது மட்டும்தான் வேலை வாங்கமுடியும். இன்றைய காலகட்டத்தில் நாம் எங்கே ஓடுகிறோம்?

பல பெண்கள் இலேசாக முதுகு வலித்தாலோ அல்லது இடுப்பு கை கால் வலித்தாலோ, உடற்பயிற்சி செய்தால் அது சரியாகிவிடுமென ஜிம்முக்குச் சென்று, அங்கே கடும்பயிற்சிகளை மேற் கொள்கின்றனர். இதனால் அவர்களது வலி அதிகமாகுமே தவிர குறையாது'' என்கிறார்.

''தசைகளைப் பாதுகாக்க எண்ணெய் மஸாஜ் செய்தல் ஒரு முக்கியமான விஷயமாகும். குறிப்பாக பிரசவித்த இளம்தாய் கட்டாயம் எண்ணெய் மசாஜ் செய்துகொள்ள வேண்டும். தாய்லாந்து, ஹாங்காங் போன்ற நாடுகளிலெல்லாம் இதற்கென தனி பாக்கேஜே இருக்கும். இது நம் நாட்டிலிருந்து சென்ற ஒரு வழக்கம்தான். 45 வயதுக்கு மேல் குதிகால்வலி, இடுப்புவலி போன்றவை வராமலிருக்க எண்ணெய் மஸாஜ் ரொம்பவே உதவியாக இருக்கும்.

நம் உடம்பிலுள்ள லட்சக்கணக்கான நரம்புகளில் 72,000 நரம்புகள் நன்றாகச் செயல்படக் கூடியவை. அதைப்போல 108 வர்மப் புள்ளிகளும் உள்ளன. வர்மப் புள்ளிகளுக்கு அழுத்தம் கொடுக்கும்போது நரம்புகள் சீராக இயங்குகின்றன. அதற்கு வர்ம சிகிச்சை பெரிதும் உதவுகிறது. இது தான் வர்மசிகிச்சையின் ப்ளஸ் பாயிண்ட். அதே நேரத்தில் குறைந்தபட்சம் 48 நாட்கள் இந்தச் சிகிச்சையை மேற்கொள்ள வேண்டியுள்ளதால், அதை மைனஸ் பாயிண்டாகப் பலரும் நினைக்கிறார்கள்'' என்கிறார் டாக்டர் சுப்புலட்சுமி.

**- நளினி சம்பத்குமார்**

1

# ஸ்ரீ லலிதா

## மூன்றாம் பாகம்

பக்தர்களை ஆதாரமாகக் கொண்ட கல்பகக் கொடி அம்பாள் ஸ்ரீ லலிதாம்பிகை (பக்திமத்கல்பலதிகா). இதனை ஸ்ரீ லலிதா இரண்டாம் பாகத்தின் கடைசி அத்தியாயத்தில் அனுபவித்தோம்.

பக்தர்களைச் சார்ந்துள்ள கொடியென்பதால், வெறும் லலிதமான குணம் மட்டும் படைத்தவள் அம்பிகை என்று நாம் நினைத்துவிடக் கூடாது என்பதுபோல அமைந்திருக்கின்றன அடுத்து வரும் திருநாமங்கள்.

**தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்திரிகா** என்கிற நெடிய திருநாமம். தாபத்ரியங்களாகிற அக்னியைக் குளிர்விக்கக்கூடிய நிலவாக அம்பாள் இருக்கிறாள்.

**தாபத்ரயம் என்றால்...?**

ஒவ்வொரு ஆத்மாவுக்கும் மூன்று விதமான தாபங்கள் இருக்கின்றன.

இந்த்ரியங்களினால் ஏற்படக்கூடிய தாபங்கள் முதலில் வருகின்றன. நம் ஒவ்வொருவருக்கும் ஞானேந்த்ரியங்கள் ஐந்து, கர்மேந்த்ரியங்கள் ஐந்து, ஞானேந்த்ரியங்கள் கொண்டுவந்து தரக்கூடிய தன் மாத்திரைகள் ஐந்து. புலனுறுப்புகளால் உருவாகும் இவை எல்லாவற்றுடனும்

**சுதா சேஷய்யன்**

சேர்ந்து, அந்தகரணம் என்ற நான்கு அம்சங்கள் - மனம், புத்தி, அகங்காரம், சித்தம். இந்த நான்கும் நம் உள்ளே (அந்த) இருக்கக்கூடிய கருவிகள் (கரணம்). வெளியிலே இருக்கக் கூடிய கருவிகள்தான் கண், காது, நாக்கு, மூக்கு போன்ற கருவிகள் - அதாவது இந்த்ரியங்கள்.

சைவ சித்தாந்தமானது, நான்கு அந்த கரணங்களையும் வகைப்படுத்தி, அவை என்னென்ன பணிகளைச் செய்கின்றன என்று சொல்கிறது.

கண் ஒரு விஷயத்தைப் பார்க்கிறது. பார்த்தவுடனே, அதனிடமிருந்து போகக் கூடிய செய்தியானது, பார்க்கிற பொருளின் வடிவம் என்ன, நிறம் என்ன, அளவு என்ன என்பதையெல்லாம் தெரிவிக்கிறது. ஆனால், அந்தப் பொருள் என்ன என்பதை உணர்வது புத்தியும் மனமும்தான். இந்த மனம் எங்கே இருக்கிறது என்பது தெரியாது. கம்ப்யூட்டரில் ஒரு சி.பி.யூ. இருந்துகொண்டு, தகவல்களை வாங்கிப் போட்டுக்கொண்டு, வகை பிரிப்பது மாதிரி, நம்முடைய அந்தகரணங்களும் தகவல்களை வாங்கிப் போட்டுக்கொள்கின்றன. 'உள்ளே' போட்டு ஒரு சுழற்றுச் சுழற்றுகிறது. 'இதை, (அல்லது, இவரை) நான் இதற்கு முன்பே எங்கேயோ பார்த்திருக்கிறேனே! இதே மாதிரிதான் இருந்தது; ஆனால் இதைவிட கொஞ்சம் பெரியதாக, உயரமாக இருந்தது...' என்றெல்லாம் ஒப்பு நோக்கி, ஏற்கெனவே பதிந்துள்ள தகவல்களுடன் பொருத்திப் பார்த்து, ஒரு முடிவுக்கு வருவது நமது அந்தகரணங்களுள் ஒன்றாகிய மனம். புத்தி என்ன பண்ணும், சுவர்க்கடிகாரத்தை ஏற்கெனவே தெரிந்து வைத்திருப்பதால், அதே போல் சிறிய வடிவில் கையில் அணிந்துள்ள ஒரு பொருள், கைக்கடிகாரம் என்று முடிவுக்கு வரும். மனம் எடை போடுகிற

ஒரு விஷயத்தை, தீர்மானத்துக்குக் கொண்டு வருவது புத்திதான். அந்தத் தீர்மானத்துக்கு வந்தவுடனே, அகங்காரம் என்ன பண்ணும், 'இதைக் கைக்கடிகாரம் என்று சொல்வதுதான் சரி; வெறுமே கடிகாரம் என்று சொல்வது தவறு' என்று ஒரு வல்லமையோடு சட்டம் பேசும்! இதற்கும் மேலாக, இந்த மூன்றையும் தாண்டி, சித்தம் இருக்கிறதே, அது என்ன செய்கிறது? 'இந்தப் பொருளின் உபயோகம் என்னவென்று தெரிந்துகொண்டால் போதாதா? இது எந்தப் பெயரால் அழைக்கப்பட்டால் என்ன? எல்லாமே ஆண்டவனுடைய அறிவுதானே!' என்று அறிகிற நிலைக்குப் போகிறது. இந்தச் சித்தம் என்பதுதான் பரபிரம்மத்தை அறியக்கூடிய ஸ்தானம். அதனால்தான் அபிராமி பட்டர் 'என் புந்தியுள் எந்நாளும் வந்து பொருந்துகவே' என்றார் அம்பாளிடம். புந்தி என்றால் சித்தம்.

அந்தச் சித்தத்தில் அம்பாள் வந்து நடனமாட வேண்டும் என்கிற எண்ணம் ஏன் வருகிறது மகான்களுக்கு?

இந்த மனமும், அதன் கீழுள்ள இந்த்ரியங்களும் அடைகிற சஞ்சலங்களைத் தாண்டிச் செல்லவேண்டும் என்கிற பேராவல் காரணமாகவே வருகிறது. சித்தம் மூலமாகவே எது தேவையோ, எது பேரறிவோ அந்த அனுபூதி நிலையை அடைய முடியும்.

ஆக, இந்தச் சித்தம் உள்பட,

**அந்தகரணங்கள் நான்கு**
**கர்மேந்த்ரியங்கள் ஐந்து**
**ஞானேந்த்ரியங்கள் ஐந்து**
**தன்மாத்திரைகள் ஐந்து**

என்று இவை அனைத்தும் சேர்ந்து தாபங்களை உண்டாக்குகின்றன. அதற்குப் பெயர்தான் ஆத்யாத்மிக தாபங்கள்.

தாபத்ரயங்கள் என்ற மூன்றினுள் முதலாவதான ஆத்யாத்மிக தாபத்துக்குக் காரணம் அந்தகரணங்கள், ஞான-கர்ம



இந்த்ரியங்கள், தன்மாத்திரைகள்.

இது தவிர, பௌதிகரீதியாக, பஞ்ச பூதங்கள் உருவாக்கக்கூடிய தாபங்கள் (துன்பங்கள்) இருக்கின்றன. இவை ஆதிபௌதிக தாபங்கள்.

இது மட்டுமில்லாமல், எங்கிருந்து துன்பம் வரும், எங்கிருந்து துக்கம் வருகிறது என்று சொல்ல முடியாதபடிக்கு, முன்பு செய்த கர்மவினைகளின் மூலமாகத் தொடங்கி வருகின்ற ஆதிதைவிக தாபங்களும் அனுபவிக்கிறோம்.

இந்த மூன்று விதமான துன்பங்களையும், அவற்றை ஏற்படுத்துகின்ற காரணிகளையும் அக்னியாகக் கொண்டால், அதன் தகிப்பிலிருந்து நம்மைக் காக்கிற குளிர் நிலவுதான் அம்பாள், லலிதாம்பிகை.

**அம்பாள் உத்தம ஸ்த்ரீ மட்டுமல்ல; பெண்களுக்கெல்லாம் சிறந்த பெண்மை அவள்!**

### பிராரப்தமும் பொடிபடும்!

சாதாரணமாக, முன்ஜன்மத்தில் செய்த வினைகளின் பயனாகத் தொடர்கிற பிராரப்த கர்மத்தை நாம் ஒன்றும் செய்ய முடியாது, அசைக்கவே முடியாது என்று சொல்வார்கள். ஆத்யாத்மிக, ஆதிபௌதிக தாபங்களை வேண்டுமானால் கட்டுப்படுத்தலாம்; ஆதிதைவிகத்தை ஒன்றுமே பண்ண முடியாது என்பர். ஆனால், பண்ணிய பாபத்தின் பயன் நம்மைத் தொடருமேயானால், அதிலிருந்துகூட நமக்கு விமோசனத்தைத் தரக்கூடியவள் அந்த லலிதாம்பிகை.

**தருணி** - இது அடுத்த திருநாமம். தருணி என்றால், என்றைக்குமே இளமையுடன் இருக்கக்கூடியவள். தருணம் என்கிற சொல்லே 'தருணி' என்பதிலிருந்து வந்ததுதான்.

**தாபஸ ஆராத்யா** - தபஸ்விகளாக இருக்கக்கூடியவர்கள் அவளை ஆராதனம் செய்கிறார்கள். அவர்களது ஆராதனைக்கு உரிய தெய்வம் அவள்தான்.

### பொய்யா? மெய்யா?

**தனுமத்யா** - மிக நுண்ணிய இடையை உடையவள். ஒரு சாதாரண பெண்ணினுடைய இடையையே நுண்ணியது என்று வர்ணிப்பது வழக்கம். **அம்பாள் உத்தம ஸ்த்ரீ மட்டுமல்ல; பெண்களுக்கெல்லாம் சிறந்த பெண்மை அவள்!** அவளுடைய இடை எத்தகையதாக இருக்கும்! அதைக் குறிக்கின்ற திருநாமம்தான் தனுமத்யா.

கம்பர் சீதையைப் பற்றிப் பாடுகிற போது சொல்லுவார் :

'பொய்யோ என்னும்
இடையாளொடும்
இளையானொடும் போனான்!'

என்பார்!

'சீதைக்கு இடை இருந்ததா?' என்றே ஒரு கேள்வியை எழுப்புவார்!

கடவுள் இருக்கிறாரா, இல்லையா? என்று உலகத்திலே சர்ச்சை நடக்கிறது. சில பேர் 'இல்லை' என்று சொல்கிறார்கள். வேறு சிலர் 'இருக்கிறார்' என்கிறார்கள். ஆனால், எல்லா மனங்களுக்கும் தெரியும் அவர் இருக்கிறார் என்பது! அதே மாதிரிதான் சீதையினுடைய இடை காட்சியளிக்கிறது! நிச்சயமாக அது இருந்தாலும், 'இருக்கிறதா இல்லையா?' 'இருக்கிறதா இல்லையா?' என்று சர்ச்சை நடக்கிறது.

அந்த மாதிரிதான் ஸ்ரீ லலிதாம்பிகை; தனுமத்யா என்கிற திருநாமத்துக்கும் தோற்றத்துக்கும் உரியவள்.

**(வளரும்)**

**(இத்தொடர், சென்னை, ஆழ்வார்ப்பேட்டை வீனஸ் காலனியில், ஆஸ்திக சமாஜத்தில், சுதா சேஷய்யன் ஆற்றிய உரைகளின் தொகுப்பு.)**





"யாருக்கும் சந்தேகம் வராத வாறு மன்னரைத் தீர்த்துக் கட்ட வேண்டும். என்ன செய்யலாம் புலவரே?"

"நான் வேண்டுமானால் மன்னரின் முன்னால் பாடட்டுமா?"

- அரூர் மு. மதிவாணன்

# 'என்கவுண்டர்' பாட்டு

"பசி வந்தப்பறம் சாப்பிட உட்கார்ந்து வயிறு நிறையறதுக்குள்ளே எழுந்துக்கணும்"னு எங்க டாக்டர் சொல்வாரு.

"அதை அவர் க்ளினிக்ல சொன்னா சரி, அவர் வீட்டு கல்யாண பந்தியிலா சொல்லணும்!

- வெ.சீதாராமன்



"காலத்துக்கேற்ற புது மொழி சொல்றதுல எங்க வீட்டுக்காரர் கில்லாடி."

"எப்படிச் சொல்றே...?"

"'கரன்ட் உள்ளபோதே கிரைண்டர் போட்டுக்கொள்'-னு சொல்றாரே!"

- சீர்காழி வி. ரேவதி



"எங்கள் ஆஸ்பத்திரியில் 'டிஸ்சார்ஜ் ஆகும் பேஷண்ட்டுகளை எங்கள் செலவிலேயே அவர்கள் வீட்டுக்கு அனுப்பி வைக்கப் படும்'னு போர்டு வைச்சிருக்கீங்களே, ஏன் டாக்டர்?"

"டிஸ்சார்ஜ்' ஆன பின்னாடிதான் அவங்ககிட்டே காசு எதுவும் இருக்காதே!"

- அரூர் மு. மதிவாணன்



# ஸ்டூடண்ட் மேகஸின்!

இரண்டு கல்லூரி மாணவர்கள் ஒன்று சேர்ந்தால்... ஊர் சுற்றலாம்; சினிமா பார்க்கலாம்; சாட்டிங் செய்யலாம்; அரட்டை அடிக்கலாம். ஆனால், இன்றைய சூழலுக்கு ஏற்ப சிறந்த செய்தித்தாளை வடிவமைத்துப் பரிசை தட்டிச் சென்றிருக்கின்றனர் சென்னை இந்துக் கல்லூரி மாணவர்கள்

சென்னை செயின்ட் தாமஸ் கல்லூரியின் காட்சி தொடர்பியல் துறை, சமீபத்தில் சென்னை கல்லூரிகளுக்கிடையே 'மாதிரி நாளிதழ் தயாரிக்கும் வித்யாசமான போட்டியை அறிவித்தது.

பல்வேறு டிசைன்களில், பலவிதமான கான்செப்ட்களில் நாளிதழ்களைத் தயாரித்து பல மாணவர்கள் போட்டியில் கலந்து கொண்டனர். சென்னை இந்துக் கல்லூரியைச் சேர்ந்த ராஜாவும், ப்ரவீணாவும் சேர்ந்து உருவாக்கிய நாளிதழ், கல்லூரி அளவில் முதலிடம் பெற்று பரிசைத் தட்டிச் சென்றது.

''மாதத் தினச் சரிதை' என்ற முதல் தமிழ் இதழ் துவங்கி, சுமார் நூற்றுத் தொண்ணூற்றாறு வருடங்கள் கடந்த பின்பும்... இன்டர்நெட், மொபைல், டீ.வி, விஷுவல் மேகஸின் என பல்வேறு தகவல் ஊடகங்கள் வந்தாலும், பத்திரிகை ஊடகத்தின் தேவையும் பயன்பாடும் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றன. நாட்டின் இறையாண்மையின் முக்கிய தூண்களில் ஒன்றான, பத்திரிகையை மையப்படுத்திய போட்டி ஒன்று, விஷுவல் மீடியா மாணவர்களுக்கு அவசியமென்று இப்போட்டியைத் துவங்கினோம்'' என்கிறார் செயின்ட் தாமஸ் கல்லூரியின் விஷுவல் துறைத் தலைவர் இளங்கோ.

வெற்றி பெற்ற ராஜா ''இன்றைய சூழ்நிலையின் நாடித்துடிப்பை அறிந்து, சரியான விகிதத்தில் செய்தியைப் பரிமாறினோம். 'ஊரினை நாட்டை இந்த உலகினை ஒன்று சேர்க்க பேரறிவாளர் நெஞ்சில் பிறந்த பத்திரிகைப் பெண்ணே' என்று பாரதிதாசன் குறிப்பிட்டதுபோல, எங்கள் நெஞ்சில் பிறந்து, பரிசைத் தந்து எங்களைப் பேரறிவாளராக சொல்லாமல் சொல்ல வைத்த நாளிதழ்'' என்று பெருமையடிக்க, ''ஏய் அடங்குப்பா'' என்று 'கலாய்'த்தன இணைந்து இதழ் தயாரித்த ப்ரவீணாவின் இதழ்கள்.

பத்திரிகையாளர்களை செதுக்கி அனுப்பும் இது போன்ற கல்லூரிகளின் கலைக்கூடப் பணிக்கு 'சபாஷ்' சொல்வது அவசியமானதுதான்.

– ராகவ்குமார்



இருள் சரண்யா

# நில்... கவனி... செல்! கொல்!

ஷிப்ராவின் செல்ஃபோன் தன்னை மின்சாரத்தின் உதவியுடன் உயிர்ப்பித்துக் கொண்டாலும், பவித்ராவுக்கு ஏமாற்றம் காத்திருந்தது. அதில் உள்ள தகவல்கள் எதையும் பெற முடியவில்லை.

தனது வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு செல்ஃபோன் ரிப்பேர் கடை இருந்தது நினைவுக்கு வர, பவித்ரா கிளம்பினாள்.

அப்போது பவித்ராவின் செல்ஃபோன் ஒலித்தது.

''அம்மா, நான்தான் குணசுந்தரி பேசறேன். நிலக்கடலை விக்கிறவ. கொஞ்சம் முன்னேகூட நாம பாத்துக்கிட்டமே.''

இவ்வளவு விளக்கங்கள் இல்லாமலேயே பவித்ராவால் கண்டுபிடிக்க முடிந்திருக்கும். குணசுந்தரிக்குத் தனித்துவம் வாய்ந்த குரல். தான் கொடுத்துவிட்டு வந்த விசிட்டிங் கார்டிலுள்ள, எண்ணைக் கொண்டு தொடர்பு கொண்டிருக்கிறாள். அப்படி என்ன அவசரம்?

''சொல்லுங்க குணசுந்தரி''

''உங்ககிட்டே செல்ஃபோனைக் கொடுத்தேனில்லையா? நீங்க போன கொஞ்ச நேரத்திலே வேறே ஒருத்தர் வந்தார். அந்த செல்ஃபோனைப் பத்தி என் கிட்டே விதவிதமாகக் கேட்டார். நான் எனக்கு அது பத்தி எதுவும் தெரியாதுன்னு சொல்லிட்டேன்.''

பவித்ராவுக்குச் சுரீரென்றது. யாரோ தன்னைப் பின்தொடர்கிறார். ஷிப்ராவின் இறப்பு குறித்து ஏதோ தகவல் அவருக்குத் தேவைப்படுகிறது. அல்லது ஷிப்ராவின் இறப்பு குறித்த ஏதோ தகவல் மறைக்கப்பட வேண்டுமென்று நினைக்கிறார். யாராக இருக்கும்?

''வந்தவர் பார்க்க எப்படியிருந்தார்?'' என்று கேட்டாள்.

''அறுபது அறுபத்தஞ்சு வயசு இருக்கும்மா. பெரிசா மீசை வச்சிருந்தார்.''

பவித்ராவின் மனத்தில் சட்டென ஒரு முதியவரின் முகம் நினைவுக்கு வந்தது. கூடவே வேறொரு ஜாக்கிரதை உணர்வு தோன்றியது. 'தன்னை யாரோ தொடர்ந்து கண்காணிக்கிறார்கள். அவர்களிடமிருந்து தப்ப வேண்டும்'. தன் வீட்டின் அருகிலிருந்த செல்ஃபோன் ரிப்பேர் கடை அவளுக்கு அறிமுகமில்லாதது என்பது உறைத்தது. தன்னைப் பின்தொடருபவர் அந்தக் கடைக்காரரிடமிருந்து, எப்படியாவது செல்ஃபோனைப் பறித்துக்கொண்டுவிட்டால்?

மேலும் யோசித்ததில், ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலிருந்த தனது நம்பிக்கைக்குரிய மற்றொரு செல்ஃபோன் கடைக்காரர் நினைவுக்கு வந்தார்.

''ஒரு நாளாவது ஆகும். அப்புறமாத்தான் செல்ஃபோன் வேலை செய்யுதா, அதிலேயிருக்கிற நம்பரெல்லாம் அழியாம இருக்குதான்றதைப் பத்திச் சொல்லமுடியும். கவலையே படாதீங்க. செல்ஃபோன் என்னிடம் பத்திரமாக இருக்கும். உங்க கிட்டே மட்டும்தான் இதை ஒப்படைப்

9

பேன்'' என்றார் கடைக்காரர்.

தெருவை அடைந்தபோது யாரோ ஒருத்தி தன் தோழியிடம் கூறிக்கொண்டிருந்தாள். ''என் தம்பிக்கு அடுத்த மாசம் கல்யாணம். பொண்ணு பார்க்க நானும் போயிருந்தேன். பொண்ணு லட்சுமிகரமா இருக்கா.''

பவித்ரா, தலையை உலுக்கிக்கொண்டாள். 'லட்சுமி' எப்படி மறந்தோம்.

ஒரு வருடத்துக்கு முன் ஷிப்ராவுடன் லட்சுமி குறித்துப் பேசியது, எண்ணத்தில் வட்டமிட்டது.

''என்னிடமும் உன் கணவரிடமும் சொல்லாததைக் கூட லட்சுமியிடம் சொல்வதில் தயக்கம் ஏற்பட்டதில்லைன்னு ஃபோனிலே சொன்னியே, யார் அந்த லட்சுமி? எப்படிச் சொல்வே? நேரிலா? தொலைபேசியிலா? நான் அந்த லட்சுமியைப் பார்க்கணுமே.''

படபடவென்று பவித்ரா அடுக்க, ஷிப்ரா புன்னகைத்தாள். ''லட்சுமியிடம் நேரிலோ தொலைபேசியிலோ பேசுவதைவிட, கடிதம் எழுதத்தான் எனக்குப் பிடிக்கும். அவளும் உடனுக்குடனே பதில் போட்டுடுவா.''

இப்போது அது மீண்டும் மனத்தில் இடற, 'நாளைக்கு ஷிப்ராவின் வீட்டுக்குப் போகவேண்டும்' எனத் தீர்மானித்தாள் பவித்ரா. ஷிப்ராவின் இறப்புக்குப் பின் லட்சுமியிடமிருந்து கடிதம் ஏதாவது வந்திருக்கிறதா என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும்.

**வீ**ட்டுக்குள் நுழைந்த பவித்ராவைக் கண்டதும், தன் கையிலிருந்த புத்தகத்துக்குள் தான் படித்துக்கொண்டிருந்த கடிதத்தை வேகமாக வைத்து மூடினான் குரு. ''என்ன வேணும்?'' என்று கேட்டான்.

வரவேற்பு இல்லை என்றாலும்



**கொ**ஞ்ச காலமாக போலீஸ் கதாபாத்திரத்தை விட்டுவிட்டு, கலெக்டர், டாக்டர், புரொஃபஸர் கதா பாத்திரங்களில் நடித்துவரும் விஜயகாந்த், 'எங்கள் ஆசான்' படத்துக்காக, பேங்க் மேனேஜராக வித்தியாச வேடம் கட்டி திரைக்கு வருகிறார். அந்தப் படத்தின் இயக்குநர் ஏ.வெங்கடேஷ் படத்தைப் பற்றிக் கூறுகை யில், ''கிராமங்கள்தான் இந்திய நாட்டின் முது கெலும்பு என்று காந்திஜி சொன்னார். ஆனால், இன்றைக்கு எல்லா விதத்துலயும் கிராமங்கள்தான் ரொம்ப பலவீனமா இருக்கு. குறிப்பா, பொருளாதார விஷயத்துல அதலபாதாளத்துல கிடக்கு. அப்படிப்பட்ட ஒரு கிராமத்து வங்கியில மேனேஜராக வேலைக்கு வர்றார் விஜயகாந்த். அங்க இருக்கற ஒரு பெரும்புள்ளியோட திருட்டுத்தனத்தால் பேங்க் பணம் மொத்தமும் எப்படி களவாடப் படுதுங்கறத வெளிச்சம் போட்டுக் காட்டுறார். அவங்க ரெண்டு பேருக்கும் நடக்கற மோதல்தான் கதை'' என்கிறார்.

'அரசாங்கம்' படத்தில் விஜயகாந்த்துக்கு ஜோடியாக நடித்த ஷெரில் பிரிண்ட்தான் இந்தப் படத்திலும் ஜோடி. யுவஸ்ரீ பிக்சர்ஸ் நிறுவனத்தின் சார்பில் எஸ்.வி. தங்கராஜ் இந்தப் படத்தைத் தயாரிக்கிறார்.

**– மோகன்**

'வெளியே போ' என்பதுபோல் அவன் எதுவும் சொல்லிவிடவில்லை என் பதிலேயே பவித்ராவுக்குச் சமாதானம் உண் டானது. தவிர அவனிடமிருந்து எழுந்த கேள்வி நட்பாக இல்லையென்றாலும், அதில் கடுமையும் காணப்படவில்லை என்று புரிந்தது.

தொண்டை வறண்டதுபோல் உணர்ந் தாள். ''கொஞ்சம் தண்ணி வேணும்... உங்க அப்பா வீட்ல இருக்காரா?''

பதில் கூறாமல் சமையலறையை நோக்கி நகர்ந்தான் குரு.

குரு வைத்துவிட்டுப் போயிருந்த புத் தகம் பவித்ராவின் கவனத்தை ஈர்த்தது. டேல் கார்னகியின் சுய முன்னேற்ற நூல். அவளது கவனத்தை மேலும் கவர்ந்தது அந்த நூலின் நடுவே வைக்கப்பட்டிருந்த கடிதம். அது ஷிப்ராவுக்கு வந்திருந்த இன் லாண்ட் கடிதம்!

குரு கொண்டு வந்த தண்ணீரைக் குடித்துவிட்டு, ஓரிரு வார்த்தைகள் பேசி விட்டுக் கிளம்பியபோது பவித்ராவின் கைப்பையில் அந்தக் கடிதம் இருந்தது.

**க**டிதத்தில் எழுதப்பட்டிருந்த வரி களை மீண்டும் மீண்டும் படித்தாள் பவித்ரா.

*'பூவே மாதம்*
*வெற்றிக்கான படிகள்*
*காகித ஓடம் கடல் அலைமீது*
*ராஜேந்திர - திலீப் - அஷோக்.*

**நா**ன்காவது முறை படித்தபோது சில வரிகளின் உள்ளர்த்தம் புரிந்தது. மீண்டும்... மீண்டும்... வெவ்வேறு கோணங்களில் படித்துப் பார்த்ததும் புதிர் விளங்கியது. புதியதொரு சிக்கல் முளைவிட்டிருப்பதை அவள் உணர்ந்து திகைத்தபோது, அவளது செல்ஃபோன் ஒலித்தது.

''நான்தான் அஷோக் பேசறேன். நீங்க கொடுத்த செல்ஃபோனைச் சரி செய்தாச்சு. வந்து வாங்கிட்டுப் போறீங்களா?'' என்றது எதிர்முனைக் குரல்.

**(திக்திக்)**

# நவராத்திரி அன்பளிப்பு பொருட்கள்

**32 வருட பாரம்பரியம் மிக்க**

மயிலாப்பூர்

# விஜயா ஸ்டோர்ஸ்



பக்தி மணம் கமழும் ஒரு பாரம்பரியக் கடை



பூஜைக்கு தேவையான மஞ்சள், குங்குமம், சீப்பு,
கண்ணாடி, சுவாமி அலங்கார பொருட்கள்,
அம்மன் பாவாடை, மரபாச்சி பொம்மை, அலங்கார
மாலைகள், தோரணங்கள், காப்பர், கன் மெட்டல்,
பிளாஸ்டிக், பித்தளை, ஒயிட் மெட்டல், செம்பு,
ஹாண்டி கிராப்ட், அன்பளிப்பு பொருட்கள்
மற்றும் பரத நாட்டியத்திற்கு தேவையான
அனைத்து பொருட்களும் கிடைக்கும்.








## VIJAYA STORES

42, (Opp. Kapaleeswarar Temple Office), 72, (Near Indian Bank),
North Mada Street, Mylapore, Chennai - 600 004.

**Ph: 2464 2500, 2495 7555, Res: 2464 3250**



---

# உயிர் காக்க உதவுங்கள்



ஞா.மணிவண்ணன், த/பெ. ஞானசேகரன், 1/252, சாலியமங்கலம் (அஞ்),
தஞ்சாவூர் தாலுக்கா - 613 504. செல் : 9364510024

ஐயா,

ஒரு வருடத்துக்கு முன் எனக்கு ஏற்பட்ட வைரஸ் சுரத்தால் எனது **இதயமும், இரண்டு சிறுநீரகமும்** பாதிக்கப்பட்டு, தொடர்ந்து சென்னை அப்பல்லோ ஹாஸ்பிடலில் சிகிச்சை பெற்று வருகின்றேன். 22.5.2008 அன்று இருதய அறுவை சிகிச்சை (Open Heart Surgery) முடிந்தது. எதிர்வரும் 9.10.2008 அன்று எனது தாயாரின் சிறுநீரகத்தை, எனக்குப் பொருத்தி சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை (Kidney Transplant Surgery) செய்யப்பட உள்ளது. அறுவை சிகிச்சை கட்டணம் ரூ.5,00,000 (ஐந்து லட்சம்) தேவைப்படுகிறது. ஏழை என்னால் இந்த மருத்துவ செலவை ஈடு செய்ய முடியவில்லை. எனவே, தாங்கள் தரும் ஆசீர்வாதமும், நிதி உதவியுமே என் உயிர் காக்க உதவும்.

நன்றியுடன் உண்மையுள்ள,

**ஞா.மணிவண்ணன்**

நிதி உதவியை Cheque or D.D. மூலம் Apollo Hospital, A/c G.Manivannan, ID No.1436361 என்று பூர்த்தி செய்து கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பவும்.

**Apollo Hospital, Chennai - 6**



# எப்படிச்

**பணவீக்கம் பன்னிரண்டு சதவிகிதத்தைத் தொட்டுவிட்டது. சாமானிய மக்களின் குடும்பப் பட்ஜெட்டில், துண்டு விழுந்த காலம் போய் பெரிய வேஷ்டியே விழுகிறது. அளவான குடும்பங்களுக்கே இந்தக் கதி என்றால், ஆதரவற்ற இல்லங்களின் நிலைமை எப்படி இருக்கும்? விசாரித்தோம்...**

''எங்களது இல்லத்தில் இருக்கும் மனநலம் குன்றிய ஒவ்வொரு பெண்மணியும், இறைவனின் சிறப்புக் 'குழந்தைகள். அவர்களுக்குச் சேவை செய்வதில் முழுமையான ஈடுபாட்டுடன் இருந்தால், இறைவன் அருளால் இந்த இல்லத்தின் தேவைகள் பூர்த்தி செய்யப்படும் என்று நான் திடமாக நம்புகிறேன்'' என்கிறார் கீதா. இவர் சென்னை திருமுல்லைவாயிலில் 'ஃப்ரெண்ட்ஸ் ஃபார் தி நீடி' என்ற பெயரில் மனநலம் பாதிக்கப்பட்ட பெண்களுக்கான, ஓர் இல்லத்தை நடத்தி வருகிறார். ''கொடையுள்ளம் கொண்டவர்களை அணுகி, இல்லத்தில் இருப்பவர்களுக்கான ஒருநாள் செலவை, ஆண்டுக்கு ஒருமுறை ஏற்றுக்கொள்ளுங்கள் என்று கேட்டு, அதில் கணிசமான அளவு வெற்றி காண்கிறோம். இன்றைய சூழ்நிலையில், ஏராளமான அளவுக்குப் பணம் திரட்டி, வைப்பு நிதியாக வைத்து, அதிலிருந்து கிடைக்கும் வட்டியைக் கொண்டு செலவழிப்பது மிகவும் சிரமமான காரியம். எனவே, நாங்கள் நன்கொடைகளையும், ஸ்பான்சர்களையும் நம்பியிருக்கிறோம். விலைவாசி கடுமையாக ஏறிவிட்ட இன்றைய சூழ்நிலையில், இந்த இல்லத்தை நடத்துவது மிகவும் சிரமமாக

இருக்கிறது'' என்று கூறுகிறார் கீதா.

''எங்கள் ஆஸ்ரம வளாகத்தில் உள்ள தோட்டத்தில் நாட்டுக்காய்கறிகள் நிறைய பயிரிடுகிறோம். மாணவ மாணவிகளுக்குத் தோட்ட வேலை, பொழுதுபோக்காகவும், உடற்பயிற்சியாகவும் இருக்கிறது. உருளை, வெங்காயம், முட்டைக்கோஸ் போன்றவற்றை வெளியிலிருந்து பெறுகிறோம். மளிகைச் சாமான்களையும், இதரப் பொருட்களையும் மொத்த விற்பனையாளர்களிடம் குறைந்த விலையில் வாங்கிப் பயனடைகிறோம்'' என்கிறார் ராஜாராம்.

ஆசிரமவாசிகளுக்குச் சிக்கனத்தின் அவசியத்தை உணரச்செய்வதன் மூலமாக, சிவானந்தா ஆசிரமத்தில் தேவையில்லாத செலவைக் குறைக்கிறார்கள். அதேபோலத்தான், ''மின்சாரம், தண்ணீர் எல்லாவற்றிலும் சிக்கனம் கடைபிடிக்கப்படுகிறது'' என்கிறார் ராஜாராம்.

என்று கூறி அழுது விட்டார். இதுபோல கடும் விலைவாசி உயர்வால் பாதிக்கப்பட்டவர்கள் பலர். சேவாலயாவில் நன்கொடை செலுத்திவிட்டு, குழந்தைகளோடு பிறந்தநாள் கொண்டாடினால் அது குழந்தைகளுக்குப் பயன்படும்'' என்கிறார் சேவாலயா இல்லத்தின் முரளீதரன்.

''தற்போது மாநில அரசாங்கங்கள், ஆதரவற்ற

# சமாளிக்கறாங்க?

''ஒரு பெண்மணி, தன் பெண் குழந்தையை அழைத்துக்கொண்டு சேவாலயாவுக்கு வந்தார். அவரது கணவன் பொறுப்பில்லாமல் விட்டுவிட்டு ஓடிப்போய்விட்டான். வீட்டு வேலை செய்யும் அந்தப் பெண்மணிக்கு, தம் மகளை நன்றாகப் படிக்க வைக்க ஆசை. எனவே, 'என் மகளை சேவாலயாவில் சேர்த்து நன்றாகப் படிக்க வையுங்கள்; நான் யார் வீட்டிலாவது வேலை பார்த்துக்கொண்டே சமாளித்துக் கொள்கிறேன்'



• முரளீதரன்...

• ராஜாராம்...



குழந்தைகள் இல்லங்களுக்கு அளிக்கும் மானியம், ஒரு குழந்தைக்கு மாதத்துக்கு 36 ரூபாய்; மத்திய அரசு அளிப்பது 200 ரூபாய். இது பத்தாண்டுகளுக்கு முன்பாக நிர்ணயிக்கப்பட்ட தொகை. இன்றைய விலைவாசி நிலவரத்துக்கேற்ப இந்தத் தொகையை அரசாங்கம் அதிகரித்தால், மிகவும் சௌகரியமாக இருக்கும்'' என்கிறார் சிவானந்தா ஆசிரமத்தின் ராஜாராம்.

**- எஸ். சந்திரமௌலி**



"எடிட்டர், என் மேல கோபமா இருக்கார்னு நினைக்கிறேன்..."

"எப்படிச் சொல்றே?"

"நான் ஆர்டினரி போஸ்ட்ல அனுப்பற கதையை, ஸ்பீடு போஸ்ட்ல திருப்பி அனுப்பிடறாரே!"

- குமார்



"அவர் கல்யாண புரோக்கர்னு தெரியாம, 'பொண்ணு , 'பேய் பிடிச்ச மாதிரி ஆடுறா'ன்னு சொல்லித் தொலைச்சுட்டேன்..."

"அடடா... அப்புறம்?"

"பேய் பிடிச்ச பையன்கள் ஜாதகம் கைவசம் இருக்கு; முடிச்சிடுவோமான்னு கேக்கறாரே!"

- சீர்காழி வி. ரேவதி



"ஏகப்பட்ட கடனை வாங்கித் தொலைச்சுட்டேன். எல்லாருமா வந்து நெருக்கறாங்க!"

"வாங்குன கடனை என்ன பண்ணினே?"

"அதுதான் 'தொலைச்சுட்டேன்'னு சொல்றேன்ல... அப்புறம் என்ன கேள்வி?"

- பெ. கலாசாமி



''ஸாரி சார்.. காசு வேணாம். உங்க செல்லை மட்டும் கொடுங்க. நாலு எஸ்.எம்.எஸ். மட்டும் தட்டிட்டுத் தர்றேன்...!''

''.........?!?!''

- பி.ஜி.பி. இசக்கி

# SMS பிச்சை!

''என் மனைவி, அம்மா வீட்டுக்கு கோவிச்சுட்டுப் போய்ட்டா. அந்த நேரம் அவளோட அம்மா என் வீட்டுக்கு வந்துட்டாங்க...''

''தலைவலி போய், திருகுவலி வந்திருச்சுன்னு சொல்லு!''

- சி.பி. செந்தில்குமார்





''தலைவர்கிட்டே லஞ்ச விஷயமா 'லட்சம்' காட்டிப் பார்த்தேன்...!''

''அவர் என்ன சொன்னார்?''

''இதெல்லாம் பத்தாதுங்கற மாதிரி கோடி காட்டிட்டார்!''

- அம்பை தேவா

தீப்பெட்டி சைஸ் ரூம்; அதுக்குள்ள ரெண்டு கட்டில்; ஒரு டேபிள் - சேர்; ரெண்டு சுவருக்கும் இணைப்புப் பாலமாய் ஒரு கொடி; அதுல துவைச்சதா, துவைக்காததான்னு யாராலும் கண்டுபிடிக்க முடியாதபடி எப்பவும் குவிஞ்சு கிடக்கற துணி மூட்டை; கலகலப்பு, பரபரப்பு, நெருக்கடி; வேகமும், சோகமுமாய் விதவிதமான முகங்கள் - இப்படியொரு தனி உலகம்தான் மேன்ஷன்.

இளம் வயது, முதிர் வயது, நடு வயதுகளின் சங்கமமாய் இருக்கிற மேன்ஷனுக்குள்ளே திடீர் விசிட் அடித்தோம்...

விஜய், கமல் ரெண்டு பேரும் ஒரே ரூம்ல இருந்தாங்க (எல்லாம் நம்ம பசங்கதான்!) ''மாப்பிள்ளை, மச்சான், பாஸ்...னு ஜாலியா போய்க்கிட்டு இருக்கு ஸார் மேன்ஷன் லைஃப்! ஆனா கடன் வாங்கினாத்தான் எவனுமே திருப்பித் தர்றதே இல்ல. சரி, நானும் பாரி பரம்பரை மாதிரி, அப்படியே விட்டுர்றது'' என்று தாராளப் பிரபுவாகப் பேசினார், விஜய். (கடன் வேண்டுவோர் விஜயை உடனே தொடர்பு கொள்க!)

''ஏர்டெல் சூப்பர் சிங்கர்ல ஜெயிக்கற மாதிரிதான் விஜய்க்கு நெனப்பு; பாத்ரூமுக்குப் போனோம், குளிச்சிட்டு வந்தோம்னு கிடையாது. பாட்டுப் பாடியே எங்களையெல்லாம் கொலை பண்றான்'' என குற்றப்பத்திரிகை தாக்கல் செய்த கமல், ''நேற்றும் இதேமாதிரிதான் பண்ணினான், குளிச்சிட்டு ஒரு வழியா நீட்டா தலை துவட்டிக்கிட்டே வந்தான். நாங்க நாலு பேரு ரெடியா நாலு வாளியில தண்ணி பிடிச்சு வச்சிருந்தோம். நச்னு ஒரு ஜல அபிஷேகம் பண்ணி வைச்சோம்'' என்றார்.

''இதென்ன



* கமல், விஜய், ஜெகன்

பிரமாதம்?''

என்று நாம் பேசுவதை ஒட்டுக்கேட்டு வந்த ஜெகன், ''நானும் என் ஃப்ரெண்டும் ஒரே பாத்ரூம்ல குளிச்சு கலாட்டா பண்ணியிருக்கோம்'' என்றார்.

குடிக்கிற தண்ணில குளிக்கிறது, அசந்து தூங்குற ஃப்ரெண்ட் காதுக்குள்ள குச்சி விடறது, அவசர அவசரமாக ஃப்ரெண்ட் வெளிய கிளம்பிக்கிட்டு இருக்கும்போது ரூம்

**மேன்ஷன் ப்ளஸ்**

★ சுதந்திரமான உணர்வு

★ வித்தியாசமான சூழல்

★ கவலையை மறக்க வைக்கும் நண்பர்கள்

★ எதையும் எதிர்பார்க்காத நட்பு

★ எப்படியும் வாழ்ந்திடலாம்னு ஒரு நம்பிக்கை தருவது.

**மேன்ஷன் மைனஸ்**

★ காற்றே பார்க்காத ரூம்

★ பயப்பட வைக்கும் பாத்ரூம்

★ நம்ம டிரஸ்ஸ, நாமே துவைக்கக் காத்துக் கிடப்பது

★ கடன் கேட்டு நம்மள கலவரப்படுத்துவது

★ ஏதோ இழந்த மாதிரி ஒரு ஃபீலிங்

கதவத் தாழ்போட்டு ரவுசு பண்றதுனு ஏகப்பட்ட தில்லாலங்கடி வேலைகள

★ முருகன், ராதாகிருஷ்ணன்

கேட்டதற்கு, ''எப்ப வேணாலும் வரலாம்; போகலாம். ஃபுல் ஃப்ரீடம், செம ஜாலியா போய்க்கிட்டிருக்கு'' என்றார்.

''ஏகப்பட்ட கலாட்டா பண்ணியிருக்கோம்'' என்று ஆரம்பித்த ராதாகிருஷ்ணன், ''வாட்ச்மேன லேட் நைட் எழுப்புறது ரொம்பக் கஷ்டம். அதனால எக்ஸ்ட்ரா ஒரு சாவி போட்டு வைச்சுக்கிட்டோம். சினிமாவுக்குப் போயிட்டு லேட்டா வந்து நைஸா ஓப்பன் பண்ணி உள்ளே போயிருக்கோம்'' என தனது சாகசங்களைப் பகிர்ந்துகொண்டார்.



# மேன்ஷன் வாசம்!

விஜய், கமல் கூட்டணி பண்ணியிருக்கு.

அடுத்து, பக்கத்துல இருந்த பதினைந்தாம் நம்பர் ரூமுக்குப் போனா, முருகனும், ராதாகிருஷ்ணனும் தீவிரமான டிஸ்கஷன்ல இருந்தாங்க. ஏதோ 'விஷால், நயன்தாரா, த்ரிஷா...'னு லைட்டா நம்ம காதுல கேட்டது. ''...ம், முருகன், எப்படி இருக்கு மேன்ஷன் லைஃப்?'' என்ற

விடை கூறும் தருவாயில் விஜய் சொன்னது, ''இங்க நிறைய நட்பு கிடைக்கும். ஆனா இங்க யாரும் நிரந்தரம் கிடையாது.''

நிரந்தரம், மேன்ஷனில் மட்டும் அல்ல, எங்குமே கிடையாது விஜய்!

**– எம். திரவியமுருகன்**



# தகுதி

ராத்திரி மணி 8.30. வழக்கம் தவறாது சங்கு ஊதும்; ஊதாமல் போகும்.

ஆனால், சங்கு ஊத ஆரம்பித்து முடிப்பதற்குள் முன்பின் இடைவெளியில், விடாது சரியாக வந்து நிற்பான் அந்த ராப்பிச்சை!

பைஜாமா, குர்தா, ஜோல்னாபை, தாடி என இலக்கிய விழாவுக்குப் போகும் கவிஞன் போல் இருப்பான்.

உடை அழுக்கும், செம்பட்டை முடியுமே அவன் ஏழ்மையைக் காட்டும்.

வந்து வாசலில் வெறுமனே நிற்பான். பேசவோ, கூப்பிடவோ மாட்டான்.

கமலா, மிஞ்சியது எதையும் எடுத்துத் தருவாள்.

இன்று வந்தவன் கேட்டான்.

''அம்மா, பழைய சட்டை வேட்டி இருக்குமா?'' வியப்பாக இருந்தது. முதல் கோரிக்கை என்பதால் உடனே தந்தாள்.

மறுநாள் அந்த உடையில் வந்தவன், ''அம்மா, உங்க தயவால் மூணு வேளை வயிறு நிரம்புது. என் பழைய உடையில் பார்த்தா பிச்சைக்காரன் மாதிரி இல்லேன்னு விரட்டி விட்டுட்டு இருந்தாங்க.'' பரிதாபமாகச் சொன்னான்.

கமலா மனசுக்குள் வருந்தினாள்.

**யூ. பைஸ் அஹமத்**

# நியாயம்

''உங்களை நம்பித்தானே கடன் தர்றோம்? நாங்க மறந்தாலும் நீங்கதான் ஞாபகமா திருப்பித் தரணும். அதானே நாணயம்? இப்படியிருந்தா எப்படி?''

வீட்டிலிருந்து கடைக்குப் போனபோது என் மனைவி பூங்கொடி, அருணாச்சலத்திடம் கோபமாகப் பேசிக்கொண்டிருந்தாள். அவளைச் சமாதானப்படுத்திவிட்டு, அருணாச்சலத்திடம், பணத்தை வாங்கிக்கொண்டு அனுப்பி வைத்தேன். அருணாச்சலம் ஏமாற்றும் ஆள் அல்ல; எப்படியோ மறந்துவிட்டார். அதற்காக இப்படியா?

மாலை கடைக்கு வேண்டிய சாமான் வாங்க, மனைவியுடன் சந்தைக்குக் கிளம்பினேன். எல்லாப் பொருள்களும் வாங்கிக்கொண்டு கடைசியாக மிளகாய் வாங்கிவிட்டு, கிளம்பும்போதுதான் ஞாபகம் வந்தது. பணமில்லாமல் முன்பு இருநூறு ரூபாய் கடன் வைத்துவிட்டு போனது. கடைக்காரருக்கு ஞாபகப்படுத்தி, பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தேன்.



''கடைக்காரனே மறந்துட்டான். நீங்க பணம் குடுத்துட்டு வர்றீங்க... நல்லா பொழைச்சுப்பீங்க போங்க...'' நக்கலாய்ச் சொன்னாள் என் மனைவி.

**கே. ஆனந்த்**

'இந்தியப் பெண்களின் உடை எது, அவர்களை அடையாளப்படுத்திக் காட்டுவது எது?' என்று கேட்டால், பட்டென்று பதில் வரும் 'சல்வார் கமீஸ்'. வடநாட்டின் பிரபலமான சல்வார் கமீஸ் இன்று நாடெங்கிலும் சூப்பர் ஹிட். சமீபகாலத்தில் ஹாலிவுட் நட்சத்திரங்களான மடோனா, ஜெனிஃபர் லோபஸ், ஷரோன் ஸ்டோன் இவர்களுடன் ஹில்லாரி கிளின்டனுக்கும் பிடித்த உடை சல்வார் கமீஸ்.

பிரின்டட், ப்ளையின் க்ரேப், காட்டன் சில்க், எம்பிராய்டரி, ஜர்தோஸி, குந்தன்வொர்க் என சல்வார் கமீஸில் ஏகப்பட்ட சாய்ஸ்! 'பண்டி அவுர் பப்லி' என்ற சினிமாவில் ராணி முகர்ஜி போட்ட சல்வார் கமீஸ்கள் செம பாப்புலர். சைனீஸ் காலர் வைத்த குர்தா, பீட்வொர்க், எம்பிராய்டரி என வெரைட்டியாக ராணி போட்டு அசத்த, உடனே கல்லூரி விழாக்களில், ராணியின் ஆட்டம், ஆடை இரண்டையுமே பாப்புலராக்கிவிட்டனர் இளம்பெண்கள்!

சல்வார், சுடிதார் இரண்டுமே கால் சட்டை... அதாவது பாட்டம்! சல்வார் - லூஸ், சுடிதார் - டைட்; கமீஸ் அல்லது குர்தா மேலுடை - டாப்! சல்வார், சுடிதாரைவிட இப்போதைய படு பாப்புலர் பட்டியாலா சல்வார்!

பட்டியாலா சல்வார் குடை போல விரிந்து, ஏகப்பட்ட ஃப்ளீட்ஸ்கள் கொண்ட உடை. சாதாரண சல்வாருக்கு ஆகும் துணியைவிட அதிகம். சாதாரணமாக இரண்டு அல்லது இரண்டரை மீட்டர் துணி தேவைப்படுமானால், பட்டியாலாவுக்கு சுமார் ஐந்து மீட்டர் வரை தேவைப்படும்.

இன்று படுபாப்புலராயிருக்கும் பட்டியாலா சல்வார், பல ஆண்டுகளுக்கு முன்னே தோன்றிய உடை! பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து முகலாய மன்னர் காலத்திலிருந்தே பட்டியாலா, புழக்கத்தில் இருந்தது என்பது ஆச்சர்யத் தகவல்! இந்த உடை இந்தியா - பாகிஸ்தான் இரு நாடுகளிலுமே பெண்கள் ஒற்றுமையாக போட்டுக்கொள்ளும்(!) உடை. ஃபேஷன் + மாடர்ன் + கம்ஃபர்டபிள் = பட்டியாலா!

பட்டியாலா என்ற பெயருக்கு ஒரு சுவாரஸ்ய பின்னணி இருக்கிறது. பட்டியாலா மகாராஜா தான் தனிப்பட்டுத் தெரிய வேண்டும் என விரும்பிப் போட்ட பிரத்யேக உடை. பாகி (baggy) பான்ட் போல படு லூஸாக, ஏராளமான குட்டிக் குட்டி ஃப்ளீட்ஸுடன் போட்ட சல்வார் இன்று கல்லூரிப் பெண்களின் ஃபேஷன் ஸ்டேட்மென்ட்!

பட்டியாலா காஷுவல், ரிச் இரண்டிலுமே போட்டுக் கொள்ளலாம். காஷுவலாக வேண்டுமானால் காட்டன், ப்ரின்டட் சல்வாரா போட்டு மேலே ஒரு ஃபேப் இண்டியா (Fab India) குர்தியை போட்டால் ஆச்சு! ரிச் என்றால் சல்வாரின் கால்பக்கம் குந்தன், ஜர்தோஸி, ஸ்டோன் வொர்க் என ஹெவியாகப் போடலாம். இதற்கு மாட்சாக, குர்தாவிலும் நெக் மற்றும் ஸ்லீவ், ஸ்லிட் (ஸைட்) பகுதிகளில் எம்பிராய்டரி இருக்க வேண்டும். துப்பட்டாவில் பார்டரிலும், நடுப்பகுதியிலும் குட்டிக் குட்டி சீக்வென்ஸ் வைத்துப்போட்டால், ப்யூட்டி பாம் நீங்கள்தான்!

'ஜப் வீ மெட்' படத்தில் கரீனா கபூர் 'நகாடா நகாடா' பாட்டில் ரிச் பட்டியாலா போட்டு ஆடிய டான்ஸ் எக்கச்சக்கப் பாப்புலர்.

பஞ்சாபியரின் கிராமத்து உடை,

# பள பள பட்டியாலா!

## உடையழகு... நடை பழகு...

இன்று நாடெங்கிலுமிருக்கும் மாடர்ன் பெண்களின் முதல் சாய்ஸ்! கல்லூரிக்கும் கல்யாணத்துக்கும் ஒரே உடை! ஃபேஷனுக்கு ஃபேஷன் + கம்ஃபர்டபிள் ட்ரெண்டி.

பட்டியாலா... மகாராஜாவுக்கு ஜே!

- லதா சேகர்





# அலிபாபா

**தொ**ழில்முறை திருடனுக்கும், திரைமறைவுத் திருடனுக்கும் இடையே நடக்கும் போராட்டம்தான் படத்தின் அடிநாதம். திரைக்கதையில், விறுவிறுப்பு, சுறுசுறுப்புக் கூட்டி வித்தியாசப்படுத்தியதில் புதுமுக இயக்குநர் நீலன் கே. சேகர் வெற்றி பெறுகிறார். அதுவும் முதல் படத்துக்கான குறைகள் ரொம்பக் கம்மி.

கார் முதல் லேப்டாப் வரை திருடும் தொழில்முறை திருடனாக கிருஷ்ணா. மனிதர் பத்துப் படங்களுக்கு மேல் நடித்தவர் போல அநாயசமாக நடிக்கிறார்; வெடிக்கிறார். திருடன் பாத்திரத்தில் பிரகாஷ்ராஜோடு ஈடுகொடுத்து நடித்திருப்பது அவருக்குப் பலம். அந்தவகையில் திறமையான ஹீரோ ரெடி. கதையிலும் ஒட்டாமல் நடிப்பிலும் ஒட்டாமல் ஹீரோவுக்கு அக்கா போல வந்து போகிறார் ஜனனி (ஹீரோயின்). பிரகாஷ்ராஜ் அறிமுகமே படு அமர்க்களம். திருடப்போன வீட்டில் சமைத்துச் சாப்பிடுவதும், அந்த வீட்டுப் பெரியவருக்கு டீ போட்டுக் கொடுப்பது மென படம் முழுக்கக் கலாய்க்கிறார். அதுவும் அவர் நடத்தும் 'தோர்ட் மேன்' பாடம் வெகு சுவாரஸ்யம்.

குற்றமுள்ளவராகக் காட்டப்படும் போலிஸ் கமிஷனர் பீஜூமேனன், குற்றவாளி இல்லையென தெரிய வரும்போது கதை, சரேலென டாப் கியரில் எகிறுகிறது. கிருஷ்ணாவைச் சிக்கவைக்க அவர்தான் சதி செய்கிறார் என நம்பவைப்பதும், பின்பு அதை உடைப்பதும் தித்திக்கும் திரைக்கதை.

மந்திரியாக வரும் ராதாரவியின் தோற்றமும், டயலாக் டெலிவரியும் வெகு பிரமாதம். திலகனோடு அவர் நட்புப் பாராட்டும் காட்சிகளில் இருவரின் நடிப்பிலும் அனுபவம் தெறிக்கிறது. அஸிஸ்டெண்ட் கமிஷ்னர் அழகர் பெருமாள் அடடே பெருமாள். நல்லவரா... கெட்டவரா? என கணிக்கமுடியாத கன்னிங் கதாபாத்திரம்.

சிக்கலான முடிச்சுகள் நிறைந்த கதையை, திரைக்கதை சாவி கொண்டு லாவகமாகத் திறப்பதில் இயக்கமும் திரைக்கதையும் முதலிடம் வகிக்கின்றன. அந்தவகையில் நிஜமான ஹீரோ இயக்குநர் நீலன்.கே. சேகர்தான். ஒளிப்பதிவும், இசையும், தனி ட்ராக்கில் பயணிப்பது படத்துக்குப் பெரும் பின்னடைவு. அலிபாபா - உள்ளம் கவர் கள்வன்!

**- மெர்லின்**

# Dr.Kamakshi Memorial Hospital



Dr. T.G. Govindarajan
President - Founder - Medical Director

தமிழ்நாட்டிலேயே முதல்முறையாக உடலிலுள்ள புற்றுநோய்
மற்றும் இதர நோய்களை எளிதில் கண்டறிய உதவும்

## PET CT Scan

மருத்துவ சேவை நிறுவனத்தில் ஒரு மைல்கல்
தமிழகத்தில் இதுவே முதல் முறை

**Dr. காமாட்சி மருத்துவமனை**

கேன்சர் இன்ஸ்டிடுட் (wia)
இணைந்து பெருமையுடன்
அறிமுகம் செய்துள்ளது

CANCER INSTITUTE
Canal Bank Road
Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : 93814 36899
93814 36896




## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* பெட் சி.டி.ஸ்கேன் என்பது உடல் அணுக்களின் செயல்திறன் பற்றியும் அணு பெருக்கத்தைப் பற்றியும் முழு தகவல்களைத் தரவல்லது.
* முக்கியமாக பெட் சி.டி.ஸ்கேன், மனிதனின் உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரை முழுவதும் பரிசோதிப்பதால், உடலில் எங்கெல்லாம் புற்றுநோய் இருக்கிறது? அது வேறு எங்கெல்லாம் பரவியிருக்கிறது? நோயின் தீவிரம் எந்த அளவு உள்ளது? என்பதை எல்லாம் துல்லியமாகக் கண்டறியப் பயன்படுகிறது.
* அதேபோல், ரேடியோதெரபி, கீமோதெரபி போன்ற சிகிச்சைகளுக்குப் பின் 'பீரியாடிகல் ரிவியூ' மூலம் நோயின் தாக்கம் எவ்வளவு குறைந்துள்ளது என்பதையும் கண்டறியலாம்.
* மூளையில் ஏற்படும் 'அல்ஸைமெர்ஸ்', 'பார்க்கின்சன்ஸ்', புற்றுநோய் போன்ற நோய்களை கண்டறியவும், அவற்றுக்கு எளிய முறையில் கண்டறியவும், 'பெட் சி.டி. ஸ்கேன்' பயன்படுகிறது.
* புற்றுநோய்க்கு சிகிச்சை அளிக்கும் மருத்துவர்களுக்கு எந்த மாதிரியான சிகிச்சை முறையை பின்பற்ற வேண்டும் என்று தெளிவாக உணர்த்துகிறது. இதயத்தில் உள்ள பிரச்னைகள் மற்றும் தசைகளின் செயல்பாடுகளை அறிய உதவுகிறது.

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி - 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.










Karatmeter